நாங்கள்
டால்டாவினால்தான் சமையல்
செய்து எங்களுடைய
தினசரி சக்தியை ஈடு
செய்துகொள்கிறோம்




டால்டா-சமநிலை
உணவில் உங்களுக்கு தேவை
யான சக்திதரும் கொழுப்பை
அளிக்கிறது



# கல்கி பொருளடக்கம்

மலர் 11 இதழ் 33 | 1952 மார்ச் 16 | கர ௵ பங்குனி 3



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

காதல், சகோதர பாசம், தியாகம்
ஆகியவற்றின் உன்னத விளக்கம்!

சென்னை

ஸ்ரீ கிருஷ்ண · சித்ரா

லக்ஷ்மி (பெரம்பூர்)

மற்றும் தென்னாடெங்கும்

# அந்தமான் கைதி

தமிழ்




சென்னை, கபாலியிலும்

14-3-52 முதல் ஆரம்பம்




மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 33

# ஒளி அளிக்க வருகிறார்!

சென்னை மாகாணத்தை ஒரு காலத்தில் "இருளடைந்த மாகாணம்" என்று சொல்லி வந்தார்கள். ஆங்கிலேயர் சொன்னார்கள்; வட நாட்டார் சொன்னார்கள்; இம் மாகாணத்தவரே அதைப் பெருமையுடன் கூறிக் கொண்டதும் உண்டு.

சென்ற நாற்பது ஆண்டு காலமாக அந்தப் பட்டப் பெயர் மங்கி மறைந்து மறந்து போயுமிருந்தது. 1920-ம் ஆண்டில் காந்திமகான் இம் மாகாணத்தில் கால் வைத்த நாளிலிருந்து சென்னை அகில இந்தியாவின் முன்னால் தலை நிமிர்ந்து நிற்கத் தொடங்கியது. தேசியப் போராட்டங்களிலும், நிர்மாணத் திட்டங்களிலும், நிர்வாகத் திறமையிலும் சென்னை மாகாணம் மற்ற மாகாணங்களுக்கும் வழி காட்டியாக இருந்து வந்தது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் ராஜாஜி சென்னையின் பிரதம மந்திரியாயிருந்தபோது சென்னையின் கீர்த்தி சிகரத்தை அடைந்தது மட்டுமல்லாமல் உலக அரங்கத்திலும் வியாபிக்கத் தொடங்கியது. யாருடைய கண் பட்டதோ, யார் இட்ட சாபமோ, யார் செய்த பாவமோ, பின்னர் சென்னை மாகாணத்தைக் கிரஹணம் பிடிக்கத் தொடங்கியது. சிறிது சிறிதாக ஒளி குன்றி வந்தது. கடைசியாக இவ் வருஷத்தில், பொதுத் தேர்தலின் முடிவில், பூரண கிரஹணம் பிடித்தது. நாற்பது வருஷங்களுக்கு முன்னிலிருந்தது போல் மறுபடியும் சென்னை மாகாணம் "இருளடைந்த மாகாணம்" ஆகியிருக்கிறது!

இத்தகைய நிலைமையிலேதான் புதிய கவர்னர் ஸ்ரீ பிரகாசா நமது மாகாணத்தைத் தேடி வந்திருக்கிறார். அவருடைய பெயர் என்னமோ, இம் மாகாணத்தின் இப்போதைய நிலைமைக்குப் பொருத்தமான நல்ல சகுனமுள்ள பெயராக அமைந்திருக்கிறது. அவருடைய பரம்பரையும் பழைய சரித்திரமும் மிக உன்னதமானவை. பாரத தேசத்து மகான்களில் ஒருவராக எண்ணத் தக்க பகவான்தாஸ் அவர்களின் புதல்வர் அவர். பண்டித ஜவாஹர்லால் நேரு இங்கிலாந்தில் படித்த காலத்தில் அவரும் பாரிஸ்டர் தொழிலுக்குப் படித்தார். பின்னர், இந்தியா திரும்பி வந்த பிறகு பண்டித ஜவாஹர்லால் நேருவின் நம்பிக்கைக்குரிய சகாவாக இருந்து வந்திருக்கிறார். காந்தி மகாத்மாவை மன மொழி மெய்களால் உண்மையுடன் பின்பற்றி நடந்து வந்திருக்கும் உத்தம தேச பக்தர்களில் ஒருவர். தியாகத்தாலும் சீலத்தாலும் சிறந்தவர். இவ்வளவு அரிய குணங்களுடன் நகைச் சுவை நிரம்பப் படைத்தவர் என்ற புகழும் ஸ்ரீ பிரகாசாவுக்கு உண்டு.

"எனக்கு நகைச் சுவை மட்டுமில்லாமலிருந்தால் எப்பொழுதோ நான் தற்கொலை செய்து கொண்டு இறந்திருப்பேன்" என்று ஒரு சமயம் மகாத்மா காந்தி கூறினார். இதன் கருத்து என்ன? தம்மைச் சுற்றிலும் உள்ளவர்களிடம் காந்திஜி பல குறைபாடுகளைக் கண்டார். அவற்றைக் கண்டதும் அவர் தூய உள்ளம் பெரிதும் புண்பட்டது. ஆனால் நகைச் சுவை உணர்ச்சி காரணமாக அக் குறைபாடுகளைச் சகித்துக் கொள்ளவும், அவர்களுடனே பழகி, அவர்களைக் கொண்டே காரியங்களைச் சாதித்துக் கொள்ளவும் அவரால் முடிந்தது.

நமது புதிய கவர்னர் ஸ்ரீ பிரகாசாவுக்கும் அத்தகைய நகைச் சுவை மிகவும் தேவையாயிருக்கும். இம் மாகாணத்தில் இப்போது ஏற்பட்டிருக்கும் அரசியல் நிலைமை தேச பக்தர்களுடைய உள்ளத்தைப் பெரிதும் புண்படுத்தக் கூடியது. அதற்குக் காரணமாயிருந்த மனிதர்கள் இன்னமும் அதே போக்கில் போய்க் கொண்டிருப்பதைப் பார்க்கும்போது வேதனை உண்டாவதும் இயல்புதான். அவற்றையெல்லாம் ஹாஸ்ய உணர்ச்சி காரணமாகவே நம் புதிய கவர்னர் சகித்துக் கொள்ள வேண்டும். சகித்துக்கொண்டு இம்மாகாணத்தின் அரசியல் இருளைப் போக்கி ஒளி உண்டாக்கப் பெரும் பிரயத்தனம் செய்ய வேண்டும்.

அரசியல் நெருக்கடியைத் தவிர, பஞ்சம், பட்டினி, மழையின்மை, விளைவின்மை முதலிய கஷ்டங்களும் இம் மாகாணத்தின் சில பகுதிகளைப் பிடித்திருக்கின்றன. அவற்றை யெல்லாம் போக்குவதற்கும் நகைச் சுவையுடன் கூடிய பொறுமையும் சகிப்புத் தன்மையும் விடா முயற்சியும் நிரம்பத் தேவையா யிருக்கும்.

புதிதாக வரும் விருந்தினரைப் பார்த்து "தங்கள் வரவு நல்வரவாகுக!" என்று சம்பிரதாயமாகக் கூறுவது வழக்கம். அவ்விதம் சம்பிரதாயமாக மட்டும் கூறாமல் இதயம் நிறைந்த ஆர்வத்துடனே "தங்கள் வரவு இம் மாகாணத்துக்கு நல்வரவாகுக!" என்று கூறிப் புதிய கவர்னர் ஸ்ரீ பிரகாசாவை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

# கடவுளும் காந்தியும் ஏழையும் படும்பாடு!

நம் ஸினிமா முதலாளிகளுக்குத் திடீர் திடீர் என்று யார் பேரிலாவது அக்கறை பிறந்துவிடும்; அது போலவே பின்னால் அவர்கள் பேரில் கோபமும் உண்டாகி விடும்.

கடவுளை எப்படியாவது முன்னுக்குக் கொண்டு வந்து விடுவது என்று பிரயத்தனப் படுவார்கள்; கடவுள் முன்னுக்கு வருவதற்கு மறுத்தால் அவரைப் பாதாளத்தில் அமுக்கி விடுவார்கள்!

முன்னேயெல்லாம் நம் படங்கள் பெரும்பாலும் புராணப் படங்களா யிருந்தன. அப்போதெல்லாம் கடவுளுக்கும் கடவுளின் தோற்றங்களான அவதார மூர்த்திகளுக்கும் கூடிய வரையில் சிங்கார உடை அணிவிப்பார்கள். விதவிதமான கோர சௌந்தர்யத் திருமேனியை அளிப்பார்கள். குளிப்பாட்டிக் கொலுவில் வைப்பார்கள். காற்சக்தியிலே கொண்டு வந்தும் நிறுத்துவார்கள். நல்லவிதமாகப் புத்தி போதிப்பார்கள். பிரார்த்தனைகள் செய்து குஷிப்படுத்தியும் பார்ப்பார்கள். கடவுளுடைய அவதார லீலைகளை அபூர்வமாகச் சித்தரிப்பார்கள். இப்படி யெல்லாம் செய்தும் கடவுளுக்குப் புத்தி வராமல் போகவே, கடவுள் முன்னுக்கு வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கவே, கடவுள் விஷயமாக ஸினிமாக்களில் ஒரு மாறுதல் நடந்தது. கடவுள் உபயோகமற்றவர், அவர் ஒரு பிற்போக்குச் சக்தி, முற்போக்கின் விரோதி என்றெல்லாம் கண்டார்கள். பின்னர், ஸினிமாக்களில் கடவுள் தாக்கு தாக்கு என்று தாக்கப்பட்டார். இரணியன் காலம் முதல் இவ்வுலகில் சிலர் அவ்வப்போது செய்து வந்த கைங்கரியத்தை ஸினிமா முதலாளிகளும் செய்யத் தொடங்கினார்கள். சிலர் "கடவுளாவது! உருளைக் கிழங்காவது! அப்படி ஒன்று இல்லவே இல்லை!" என்ற தோரணையில் ஸினிமா சம்பாஷணைகளைப் புகுத்தினார்கள். இன்னும் சிலர் கடவுளின் பேரால் உலகில் சிலர் செய்யும் அக்கிரமங்களை நினைத்து உருகிக் கண்ணீர் வடித்து அத்தகைய அக்கிரமங்களைச் சித்திரித்து வெளுத்து வாங்கினார்கள். இன்னும் சிலர் கடவுளையும் காளியையும் ராமனையும் கிருஷ்ணனையும் சிவனையும் விஷ்ணுவையும் பிரம்மாவையும் நேருக்கு நேர் கொண்டுவந்து நிறுத்தி "ஏ! கடவுளே! நீ இருப்பது உண்மையா! இருந்தால், இப்படிப்பட்ட அக்கிரமங்களை யெல்லாம் ஏன் செய்கிறாய்! நீ இல்லா விட்டால், இருப்பதாகச் சொல்லி ஏன் எல்லாரை ஏமாற்றுகிறாய்!" என்று கேட்டு நேரடி நடவடிக்கையே எடுத்து விட்டார்கள்.

இவ்வளவுக்கும் கடவுள் சும்மா இருந்தார்; கல்லுப் பிள்ளையார் மாதிரி இருந்தார்; 'நாராயணன் இல்லை என்று நீ சொன்னாயே, அந்தச் சொல்லிலும் அவன் உளன்' என்று பிரஹ்லாதன் நேரே தா யுகத்திலேயே கூறினான் அல்லவா! அத்தகைய கடவுள் இந்த ஸினிமா முதலாளிகளுக்கு மசிந்து விடுவாரா! "உங்களுக்கும் பெப்பே! உங்கள் பெரியாருக்கும் பெப்பே!" என்று கடவுள் மனதில் நினைத்துக்கொண்டு இன்னமும் சும்மாத்தான் இருக்கிறார். எப்போது அவர் சொரூபத்தைக் காட்டுவாரோ தெரியாது.

சிலகாலமாக நம் ஸினிமா முதலாளிகள் காந்தி மகானை எடுத்துக் கொண்டார்கள். வெள்ளித் திரையில் காந்திஜியை ஒரு நட்சத்திரமாக்க முயன்றார்கள். அது முடியவில்லை. ஒரு 'எக்ஸ்ட்ரா' ஆக்கியாவது அவரை முன்னேறச் செய்யலாம் என்று பார்த்தார்கள். அதுவும் முடியவில்லை. காந்திஜியை எம் முறையிலாவது வெள்ளித்திரைக்குப் பயன்படச் செய்யவேண்டும் என்று கங்கணங் கட்டிக்கொண்டு காந்திஜியின் பெயரால் செய்யப்படும் அக்கிரமங்களைச் சித்திரிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அப்படி அவரைச் சிரிப்பாய்ச் சிரிக்க அடித்தால்தான் காந்திஜியையும் அவருடைய கொள்கைகளையும் முன்னுக்குக் கொண்டு வரலாம் என்பது நம் ஸினிமா முதலாளிகளின் எண்ணம். அவர்கள் வாழ்க! ஆனால் காந்திமகான் சரித்திரத்தில் இடம் பெற்று விட்டவர்; மக்களின் உள்ளங்களிலும் இடம் பெற்று விட்டவர்! அவருடைய உபதேசங்களோ ஐயந்திரிபுக்கு இடமின்றி அச்சிடப்பட்டிருக்கின்றன. அவற்றை எடுத்து நமக்கு விளக்கிச் சொல்வதற்குச் சில தலைவர்களும் இருக்கிறார்கள். அவர் உபதேசங்களின்படி நடந்து காட்டும் சீடர்களும் இருக்கிறார்கள். ஆகையால் ஸினிமா முதலாளிகளால் மகாத்மாவை வெள்ளித் திரையில் முன்னுக்குக் கொண்டு வரவும் முடியாது; சம்ரட்சிக்கவும் முடியாது. உலகம் தோன்றின நாள் தொட்டு அவதார புருஷர்களைப் பின்பற்றுவோரும் உண்டு; ஏமாற்றுவோரும் உண்டு. அதை யெல்லாம் பற்றி ஸினிமா முதலாளிகள் கவலைப்பட்டுப் பிரயோஜனம் இல்லை. காந்தியைக் கைவிட்டுவிட வேண்டியதுதான். இல்லாவிடில் அந்தவரைக்கும் Box-office நஷ்டம் ஏற்பட்டே தீரும். திரைக்கு வேண்டிய முகவெட்டு மகாத்மாவுக்கு இல்லை; ராசியும் இல்லை. அவரைக் கட்டிக் கொண்டு கஷ்டப்படுவதில் ஸினிமாவுக்கு யாதொரு பயனும் இல்லை.

அப்புறம் சிலகாலமாக ஏழைகள் நம் ஸினிமா முதலாளிகளிடம் அகப்பட்டுக் கொண்டு மிகப் பாடு படுகிறார்கள். திரையில் காட்டும் காட்சிகளிலும் ஏழைகளைப் பாடாய்ப் படுத்துகிறார்கள்; ஸினிமாக் கொட்டகை வாசல்களிலும் அவர்களை வெகு பாடு படுத்துகிறார்கள்.

ஏழை எளியவர்களின் கஷ்டங்களை அப்படியே தத்ரூபமாய்ச் சித்திரித்துக் காட்டும் படங்கள் ஸினிமாக் கொட்டகைகளில் ஓடும்போது அக் கொட்டகைகளின் வாசலில் பாருங்கள். இரண்டணா, காலணா டிக்கட் வாங்கும் ஏழைகள் படைபடைக்கிற வெய்யிலில் மணிக் கணக்கில் 'க்யூ' வரிசையில் நிற்பார்கள். அடித்து மோதி இடித்துப் புடைத்துக்கொண்டு முன்னேறுவார்கள். (ஆம்; இந்த முறையில் 'க்யூ' வரிசையில் ஏழைகள் முன்னேறித்தான் ஆக வேண்டும்.) டிக்கட் வாங்கிக் கொண்டுபோய் உட்கார்ந்து கொண்டு ராட்சஸ வடிவங்களைப் பார்த்துப் பிரமிப்பார்கள். கொஞ்சமாகப் பணத்தை வாங்கிக்கொண்டு ஏழைகளுக்கு ஸினிமா நட்சத்திரங்களைப் பெரிய பெரிய உருவங்களாக்கிக் காட்டும் ஸினிமா முதலாளிகளின் கருணையை என்னவென்று சொல்லுவது! உட்காருவதற்கு இடம் இடைஞ்சலாகத்தான் இருக்கிறது; கண்ணுக்கும் கொஞ்சம் கெடுதல் ஏற்பட்டே தீரும். அதனால் என்ன! இரண்டரை ரூபாய் கொடுத்து ஸோபாவில் உட்காரும் அசட்டுப் பணக்காரர்களுக்கு ஐந்து அடி நாலு அங்குல உயர ஸினிமா நட்சத்திரங்களைக் காட்டி விட்டு ஏழைகளுக் கென்று உருவங்களை உயரமாக்கிப் பன்னிரண்டு அடி உயர நட்சத்திரங்களைக் காட்டுகிறார்கள், பாருங்கள்!

இப்படியெல்லாம் ஏழைகளுக்கு இரங்கி உதவி செய்கிறவர்கள்,—பணக்காரர்களைத் தூரத்திலே தனியாக உட்காரவைத்துச் சலுகையின்றி அடிக்கிறவர்கள்,—திரையிலேயும் ஏழைகளைக் கொண்டு வராமல் இருப்பார்களா! கட்டாயம் கொண்டு வருவார்கள்! பிச்சைக்காரர்களையும் பிச்சைக்காரிகளையும் கொண்டு வந்து பாட்டுப் பாடிப் பிச்சை எடுக்கப் பண்ணுவார்கள். இதைப் பார்த்தும் பணக்காரர்கள் இரண்டரை ரூபாய் ஸோபாக்களில் புழுவாய்த் துடிப்பார்கள். உள்ளமும் உடலும் எரிவார்கள். ஆறு அணாக் கொடுத்து ஐஸ் கிரீம் வாங்கிச் சாப்பிட்டால்தான் அந்த எரிச்சல் பணக்காரர்களுக்குத் தீரும்!

இன்னும் ஏழைகளின் துயரங்களைக் காட்டுவதற்காக க்ஷயரோக ஆஸ்பத்திரிக்குப் போய் எலும்பும் தோலுமான நோயாளிகளைக் கஷ்டப்பட்டுப் படம் பிடித்துக் கொண்டு வந்து "இதோ இந்த நாட்டு ஏழைகள்! எப்படிக் கையைப் பிசைந்து கொண்டு கஷ்டப்படுகிறார்கள், பாருங்கள்!" என்று காட்டுவார்கள். இதைப் பார்ப்பதற்காக ஏழை மக்கள் கையைப் பிசையாமல் இரண்டணா நாலணாவை எடுத்துக் கொடுத்துவிட்டுக் கொட்டகைக்குள் வந்து மேலும் ஏழைகள் ஆவார்கள். இதே படங்களை ஸோபாக்களில உட்கார்ந்து பார்த்துப் பரிதவிக்கும் பணக்காரர்கள் அந்தக் கோபத்தைக் கொட்டகைக்கு வெளியில் ஏழைப் பிச்சைக்காரர்கள் மீது காட்டுவார்கள். "சட்! விலகிப் போ!" என்று அப்பால் தள்ளிவிட்டுப் போவார்கள். மோட்டார்களை அந்த ஏழைகள் பேரில் இடிக்காமல் போனால் அது அவர்கள் செய்த புண்ணியம்!

இன்னும் ஏழைகளுடைய இரத்தத்தைப் பணக்காரர்கள் உறிஞ்சுவது எப்படி என்று ஸினிமாத் திரைகளில் காட்டுவார்கள்! ஏழைகளைச் சவுக்கினால் அடித்துக் காட்டுவார்கள்! (ஸினிமாத் திரையிலும் ஏழைகளுக்குச் சவுக்கடிதான்!) ஏழைகளை வெய்யிலில் நின்று நெற்றி வியர்வை நிலத்தில் விழும்படி வேலை செய்யப் பண்ணிக் காட்டுவார்கள்! கர்ப்பம் தரித்த ஏழை ஸ்திரீகளை

## அவர் கூறும் ஆறுதல்!




சென்னைக் காங்கிரஸ் கட்சியின் நெருக்கடியான நிலைமையில் அபிவிருத்தி எதுவும் ஏற்படவில்லை.

அவர்களுடைய குழந்தைகளுடன் கொட்டுகிற மழையில் விரட்டி அடிப்பார்கள். அந்தக் கஷ்டங்களைக் குறித்து அழகான டப்பா சங்கீத மெட்டுக்களில் பாட்டுக்களும் பாடச் செய்வார்கள். இப்படியெல்லாம் வெளியிலே ஏழைகள் படும்பாடு போதாது என்று ஸினிமாத் திரைகளிலும் பாடு படுத்திக் காட்டும் ஸினிமா முதலாளிகளுக்கு ஏழைகள் தினம் தினம் இரண்டணா, நாலணா கொடுப்பது மட்டும் போதுமா! ஏழேழு ஜன்மங்களிலும் நன்றி செலுத்த வேண்டாமா!

* * *

எத்தனையோ பிரம்மப் பிரயத்தனங்களுக்குப் பிறகு சுதந்திரமும் சுயாட்சியும் பெற்றிருக்கும் நம் நாட்டில் இப்படியெல்லாம் ஏழைகளைப் பாடாய்ப் படுத்துவது அவசியந்தானா என்பதை நம் ஸினிமா முதலாளிகள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

கடவுளையும் காந்திஜியையும் எந்தப் பாடாவது படுத்தட்டும்; அவர்களுக்கு அதனால் ஒரு கெடுதலும் நேர்ந்து விடாது.

ஆனால் ஏழைகள் விஷயம் அப்படியல்ல. ஏழைகளின் கஷ்டங்களைப் போக்குவதற்கு நேருஜி போன்ற தேசத் தலைவர்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். மேலும் மேலும் புதிய புதிய தொழில்களை ஏற்படுத்தி நாட்டின் செல்வத்தைப் பெருக்க முயல்கிறார்கள்; பெரிய பெரிய அணைக்கட்டுக்களைக் கட்டி வருகிறார்கள். பணக்காரர்களுக்கு நிறைய வரி போடுகிறார்கள். ஏழைத் தொழிலாளிகளின் நலத்துக்காகப் பல சட்டங்களைச் செய்து வருகிறார்கள். பரம ஏழைக்கும் பெரிய முதலாளிக்கும் சரி சமமாக ஒரே வோட்டு என்று ஏற்பட்டிருக்கும் நிலைமையில், ஏழைகளின் நிலைமையை உயர்த்திடாமல் எந்த அரசாங்கமும் பெயர் சொல்ல முடியாது.

நம் தலைவர்கள் இப்படிப் பிரம்மப் பிரயத்தனம் செய்து வரும்போது, நம் ஸினிமா முதலாளிகள் சிலர் வெள்ளித்திரை மூலம் அதற்குத் தடை செய்ய முற்படுவது முறையா!

தேசத்தின் இப்போதைய நிலைமையில் துவேஷம் என்னும் பூதத்தை உற்பத்தி செய்வதும் வளர்த்து விடுவதும் உசிதமாகுமா!

உழைத்துப் பாடுபடுவதில் அருவருப்பையும் சோம்பேறி வாழ்வில் பற்றுதலையும் உண்டாக்குவது தான் நாட்டின் நன்மைக்கு உகந்ததா!

வெள்ளைக்காரர்களினால் நூற்றைம்பது வருஷங்களாகச் சுரண்டப்பட்ட இந்தியா தேசம் இன்று ஏழைத் தேசமாயிருக்கிறது. உழைப்பினால்தான் இந்நாடு உயர முடியும்; வளம் பெற முடியும். பணக்காரர்கள் உழைக்க வேண்டும்; படித்தவர்கள் உழைக்க வேண்டும்; இளைஞர்களும் முதியவர்களும் உழைக்க வேண்டும்; பாமரர்களும் ஏழைகளுங்கூட உழைக்கத்தான் வேண்டும். தனித் தனியே உழைத்தால் மட்டும் போதாது; பலர் சேர்ந்து ஒத்துழைக்கவும் வேண்டும். எல்லாரும் சேர்ந்து இடைவிடாமல் பாடுபட்டால் தான் சுதந்திர இந்தியாவை வலிமையுள்ள பேரரசாக்கலாம். பாடுபடாமல் இந்த உலகில் எந்தவித நன்மையும் யாருக்கும் ஏற்பட்டதில்லை.

செல்வம் மிகுந்த குபேர நாடாகிய அமெரிக்காவில் மக்கள் எப்படி பாடுபட்டு உழைக்கிறார்கள்! அதையெல்லாம் அவர்களுடைய ஸினிமாப் படங்களில் பார்க்கலாம். ஆங்கில மக்கள் உழைப்பதையும் ருஷிய மக்கள் அமோகமாக உழைப்பதையும் அவரவர்களுடைய படங்களில் பார்க்கலாம்.

நம் நாட்டுப் படங்களிலே உழைப்பு என்பதே கூடாது என்று காட்டுவதும், சோம்பேறிகளாக உல்லாஸமாகத் திரிவதே உயர்வு என்று சித்திரிப்பதும், இல்லாத பொல்லாத பொய்களைக் கற்பனை செய்து நாட்டு மக்களுக்குள் துவேஷத்தை வளர்ப்பதும் எவ்வளவு தீங்கானவை! எவ்வளவு அபாயகரமானவை!

மற்ற நாட்டுப் படங்களைப் போல் சுதந்திர இந்தியாவின் நிலைமைக்கு ஏற்ற உயர்ந்த இலட்சியங்கள் உள்ள படங்களைக் கொண்டு வர முடியாவிட்டால் போகட்டும். தேசத்தைக் காப்பாற்றத் தேசத் தலைவர்கள் இருக்கிறார்கள்; அல்லும் பகலும் பாடுபடுகிறார்கள்.

குற்றமற்ற முறைகளில் மக்களுக்குக் களிப்பூட்டும் ஆடல்பாடல்கள் நிறைந்த படங்களை எடுப்பதுடன் ஸினிமா முதலாளிகள் ஆத்ம சாந்தி அடையட்டும். வெள்ளித் திரையிலே ஏழைகளைப் பாடாய்ப் படுத்தித் துவேஷம் என்னும் பூதத்தை வளர்த்துவிட வேண்டாம்.

# அலட்சணப் போட்டி!

“அழகுப் போட்டி” என்ற பெயரால் ஒரு அலட்சணப் போட்டி சமீபத்தில் சென்னைமாநகரில் நடந்தது. பாரத நாட்டின் பழமை”யான பண்பாட்டுக்கும் தர்மத்துக்கும் நம் மக்களின் இரத்தத்தில் ஊறிப் போயிருக்கும் நல்ல உணர்ச்சிகளுக்கும் விரோதமான இந்த அழகுப் போட்டியில் சில முக்கியமான பிரமுகர்களும் 'ரஸிகர்'கள் என்று பாராட்டப்பட்டவர்களும் கலந்து கொண்டிருப்பதைக் குறித்து மிகவும் வருந்துகிறோம்.

பெண்கள் எல்லாரையும் தாய்மார்களாகவும் சகோதரிகளாகவும் பராசக்தியின் வடிவங்களாகவும் கருதிப் போற்றும் பண்பாடு பாரத நாட்டின் பண்பாடு. தாய்மார்களையும் சகோதரிகளையும் கொண்டு வந்து பலர் பார்க்க நிறுத்தி, முன்னழகும் பின்னழகும் பார்த்து, அலங்காரங்களை எடை போட்டு அளவிட்டு, அழகுப் போட்டி நடத்துவது எவ்வளவு அருவருக்கத் தக்க விஷயம்!

“குஞ்சியழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு!”

என்பது தமிழ் நாட்டின் மரபு. அதற்கு முற்றும் விரோதமான இந்த அழகுப் போட்டியை நினைத்துத் தமிழ் மக்கள் எப்படி ஆத்திரப்படாமல் இருக்க முடியும்!

கல்விப் பயிற்சி, கைத்தொழில் திறமை, தன் முயற்சி முதலிய துறைகளில் போட்டி நடத்தினால், அப்போட்டியில் ஈடுபடுகிறவர்களின் வளர்ச்சிக்கு உதவியாயிருக்கலாம். போட்டி யிட்டுக் கொண்டு அவர்கள் முன்னேற முயற்சிக்கலாம்.

ஆனால் அப்படிப்பட்ட அறிவியல் கல்வித் துறைகளிலே கூடப் போட்டிகளும் பரிசுகளும் வைக்கக் கூடாது என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.




"விலைவாசிகள் திடீரென்று இறங்கி வருவதற்குக் காரணம் சாமான்களைப் பதுக்கி வைத்த வியாபாரிகளும் வர்த்தகச் சூதாட்டக்காரர்களும் பீதி அடைந்து விட்டதுதான்" என்று சிலர் கருதுகிறார்கள்.

சிலருக்குப் பரிசு கிடைப்பதால் மற்றவர்களுக்கு அருவருப்பும் மனச் சோர்வும் ஏற்படுமே தவிர, அதனால் ஊக்கமும் வளர்ச்சியும் ஏற்படாது என்று அவ்வறிஞர்கள் கூறுகிறார்கள்.

அழகு என்பது கடவுள் அளிக்கும் வரப்பிரசாதம். மனிதர்களால் வளர்த்துக் கொள்ளக் கூடியது அல்ல. பின், அழகுப் போட்டி வைப்பதில் பொருள் என்ன! அழகுப் போட்டிப் பரிசைக் கடவுளுக்கு அல்லவா கொடுக்க வேண்டும்! அல்லது அழகிகளின் பெற்றோர்களுக் கல்லவா அளிக்க வேண்டும்!

பெண்களிலே அழகுப் போட்டி வைப்பது என்றால், அதற்குத் தராதரம் எப்படிக் கண்டு பிடித்து முடிவு செய்வது!

பட்டணங்களிலே சிவப்பு நிறத்துடன் மேனி மினுக்குகிற பெண்கள் தான் அழகிகளா!

"திருநெல்வேலிச் சீமையில் மறக்குலத்து ஏழைச் சகோதரிகள் மலைக்காடுகளில் விறகு பொறுக்கிக் கட்டிக்கொண்டு நடந்து வருவார்கள். அவர்களுடைய அழகிற்குக் கால்தூசி பெற மாட்டார்கள் பட்டணத்தில் பவுடர் பூசி வளரும் நாகரிக மங்கையர்கள்!" என்கிறார் ஒரு நிருபர். இதிலிருந்து அழகை எடை போட்டுப் பார்ப்பது எவ்வளவு கடினமான வேலை என்று ஏற்படுகிறது.

மதராஸில் பொறுக்கப் பட்டவர்கள் பம்பாய்க்குப் போவார்களாம். பம்பாயிலிருந்து பொறுக்கப் பட்டவர்கள் அமெரிக்கா செல்வார்களாம். அமெரிக்காவிலே சிவப்பு நிறத்துக்கு மதிப்புக் கொடுக்க மாட்டார்கள். அங்கேயுள்ள ஸ்திரீகள் முத்துச் சுண்ணாம்பு அடித்தவர்கள் போல் வெள்ளை நிறம் பெற்றுத் திகழ்வார்கள். அவர்களும் இவர்களும் சேர்ந்து அழகுப் போட்டியிடும்போது தீர்ப்புக் கூறுவது எப்படி! தமிழ்நாட்டு நல்லறிஞர் ஒருவர் கூறுவதுபோல் அமெரிக்காவின் அழகு நீதிபதிகள் அளவு நாடா (டேப்) வைத்துக் கொண்டு நம் சகோதரிகளின் மூக்கையும் காதையும் அளந்து பார்ப்பதற்கு உடன்பட வேண்டியதாயிருக்குமே!

பெண் அழகிகளின் போட்டிக்கு அடுத்தபடியாக ஆண் அழகர்களின் போட்டி தொடர்ந்து நடைபெறுமோ என்றும் நாம் அஞ்ச வேண்டியதா யிருக்கிறது. பெண்களுக்குத் தான் அழகு உண்டு, ஆண்களுக்கு இல்லை என்று யார் சொல்ல முடியும்! ஆண்களுக்கும் அழகு உண்டு என்றால், ஆண் அழகுப் போட்டியும் ஏன் நடத்தக் கூடாது! நாகரிகப் பெண்மணிகள் நீதிபதிகளாக உட்கார்ந்து ஆண் மக்களின் முன்னழகும் பின்னழகும் பார்த்து ஏன் தீர்ப்பு அளிக்கக் கூடாது! அப்படி நேர்ந்தாலும் நேரலாம்!

ஏற்கனவே நம் நாட்டில் உள்ள கோளாறுகள் போதாவென்று, இந்த அநாகரிக, அநாசார, அவலட்சண, அழகுப் போட்டியை யாரோ சில புண்ணியவான்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். இதற்கு நாட்டு மக்கள் சிறிதும் ஆதரவு காட்ட மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

# விலைவாசி குறைவதேன்? ரூபாய் மதிப்பு உயர்வதேன்?

## வரி குறைக்காதிருந்ததால்! நரி குறுக்கே சென்றதால்!!

சென்ற சில வருஷ காலமாக இந்தியாவில் எல்லாவித சாமான்களின் விலைகளும் உயர்ந்து கொண்டே போயின. சாதாரண ஜனங்கள் எட்டிப் பிடிக்க முடியாத அளவுக்கு உயர்ந்து கொண்டே யிருந்தன. அதற்குக் காரணங்கள் என்னவெல்லாமோ கண்டு பிடித்துச் சொன்னார்கள். கொரியா யுத்தம் என்றார்கள்; பணவீக்கம் என்றார்கள்; பதுக்கல் என்றார்கள்; வியாபாரிகள் சதி என்றார்கள்; ஆளுவோரின் பொருளாதார அறிவுக் குறை என்றார்கள்; இந்தியா சுதந்திரம் பெற்ற வேளையின் கோளாறு என்றார்கள்.

திடீரென்று இரண்டு வாரத்துக்கு முன்னால் அந்த விலை யேற்றம் தடைப்பட்டது. தடைப்பட்டது மட்டுமல்ல; சரிந்து விழவும் ஆரம்பித்தது. சில பொருள்களின் விலை தடதடவென்று சரிந்தது. வேறு சில பொருள்களின் விலை நிதானமாகச் சரிந்தது. உடனே வர்த்தக வட்டாரங்களில் "ஆஹா! ஊஹூ!" என்ற கூக்குரல்கள் எழுந்தன. "போச்சு! தேசத்தின் பொருளாதாரம் நாசமாச்சு!" என்று முறையிடத் தொடங்கினார்கள். "சர்க்கார் தலையிட வேண்டும்" என்றார்கள். சொர்க்கத்திலிருந்து தேவர்களால் தள்ளப்பட்டு விழுந்த திரிசங்குவை விசுவாமித்திரர் 'ஹூங்காரம்' செய்து நிறுத்தி அவனுக்காக ஒரு சொர்க்கத்தைச் சிருஷ்டித்தார் அல்லவா! அதுபோல இந்திய சர்க்கார் ஹூங்கார நடவடிக்கை எடுத்து, விலைவாசிகள் இறங்குவதைத் தடுத்து நிறுத்தி, வர்த்தகத் திரிசங்கு சொர்க்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்று கோருகிறார்கள்.

இந்தியப் பொருளாதார மந்திரி தேஷ்முகரும், வர்த்தக மந்திரி மெஹ்தாப்பும் மேற்படி அவசர யோசனைகளுக்கு இதுவரை செவி சாய்க்கவில்லை.

வர்த்தக மந்திரி மெஹ்தாப் இது சம்பந்தமாகச் சொல்லுவதைக் கேளுங்கள்:—

"யாரும் எனக்கு நேர்மையான, பாரபட்சமற்ற யோசனை கூறுவதில்லை. இத்தகைய விஷயங்களில் சர்க்காருக்குச் சரியான யோசனை கூறுவோர் இந்த நாட்டில் இராதது துரதிர்ஷ்டமாகும். சர்க்காருக்குத் தவறான யோசனைகள் கூறப்பட்டிருப்பதற்கு நான் எத்தனையோ உதாரணங்கள் காட்டமுடியும். கூக்குரலுக்கு இணங்கித் தவறான யோசனையை அங்கீகரிப்பதன் மூலம் பெரிய அனர்த்தம் ஏற்பட்டு விடுகிறது" என்று இவ்விதம் அநுபவ பூர்வமாகக் கூறியுள்ளார்.

இந்த உண்மையை இப்போதாவது உணர்ந்ததற்காக ஸ்ரீ மெஹ்தாப்புக்கு நம் வந்தனங்கள். இன்னும் கொஞ்சம் ஸ்ரீ மெஹ்தாப் முன் செல்ல வேண்டும். சுய லாபத்தை முன்னிட்டுச் சொல்லப்படும் யோசனைகளின் விஷயத்தில் இரண்டு காதிலும் பஞ்சை வைத்து அடைத்துக் கொள்ளவும் அவர் தீர்மானிக்க வேண்டும். (பஞ்சு விலையுங்கூடத்தான் இப்போது குறைந்திருக்கிறதே!) விலைவாசிகள் திரிசங்கு சொர்க்கத்தில் நிற்க வேண்டியதில்லை; நிற்கும்படி விடக் கூடாது. அவை தாமாக இறங்குகிற வரைக்கும் இறங்கும்படி விட்டுவிட வேண்டும்.

ஏன் என்று கேட்கிறீர்களா? அநேக சாமான்களின் விலை மொத்த வர்த்தக மார்க்கெட்டில் 100க்கு 25 வீதம் இறங்கிவிட்டதென்று சொல்லப்படுகிறது. இதனால் பல வர்த்தகர்கள் லட்சக்கணக்கான நஷ்டம் அடைந்து விட்டதாகவும் முறையிடப் படுகிறது. ஆனால் அந்த விலைவீழ்க்கம் கீழே சில்லறைக் கடைகள் வரையில் வந்து சாதாரண ஜனங்களுக்குப் பயன் படுகிறதா என்றால், இதுவரையில் காணோம்.

விலைவாசிகள் திடீரென்று இப்போது இறங்குவதற்கு என்ன காரணம்? சில உண்மையாளர்களான பொருளாதார நிபுணர்கள் "இன்னும் நன்றாய்த் தெரியவில்லை; ஆராய்ந்துதான் சொல்ல வேண்டும்" என்று கூறுகிறார்கள். வேறு சிலர் ஏற்றுமதி குறைந்து விட்டதையும் வெளி நாடுகளில் சாமான் விலை இறங்கி விட்டதையும் காரணமாகச் சொல்லுகிறார்கள். இன்னும் சிலர் வர்த்தக உலகத்தில் உள்ள பதுக்கல் கூட்டமும் சூதாட்டக் கூட்டமும் திடீரென்று பீதியடைந்து விட்டதுதான் காரணம் என்று கூறுகிறார்கள். ரிஸர்வ் பாங்கியின் வட்டி விகிதத்தை உயர்த்தியது காரணம் என்று சிலர் கூறுகிறார்கள். "புதிய வரவு செலவுத் திட்டத்தில் 'வரி குறைக்கப் போகிறோம்' என்று நிதி மந்திரி சொல்லாததுதான் காரணம்!" என்று ஒரு விபரீதமான காரணத்தையும் சொல்லுகிறார்கள்.

கடைசிக் காரணத்தை ஏன் விபரீதமான காரணம் என்று நாம் சொல்லுகிறோம் தெரியுமா? அது உண்மையாயிருந்தால் இந்திய சர்க்கார் வரி குறைக்கவே கூடாது என்று நாம் வற்புறுத்த நேரிடும். தேச மக்களின் நலத்துக்கு விலைவாசிகள் குறைவது மிகவும் அவசியம். "வரி குறைக்காவிட்டால்தான் விலைவாசி குறையும்" என்றால், வரியைக் குறைக்கவே கூடாது அல்லவா! அது மட்டுமன்று. வரியை இன்னும் உயர்த்துவதனால், விலைவாசி மேலும் குறைவதாயிருந்தால், வரி உயர்வைக் கூட நாம் ஆதரிக்க வேண்டியதாயிருக்கும்.

ஆகையால் 'வரி குறைக்காதபடியினால் விலைவாசி குறைகிறது' என்று சொல்லும் வர்த்தகர்கள் நல்லதற்குச் சொல்லவில்லை. வரியை மேலும் உயர்த்துவதற்கே காரணம் சொல்லிக் கொடுக்கிறார்கள்!

* * *

காரணம் கண்டு பிடித்துச் சொல்லும் வேலையில் வர்த்தகர்களும் பொருளாதார நிபுணர்களும் ஈடுபடட்டும். பொதுமக்களைப் பொறுத்த வரையில் தேசத்தின் நல்ல காலம் என்று சொல்லிக் கொள்ளத் தயாரா யிருக்கிறார்கள்.

இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்த வேளை ஒரு கால் நல்ல வேளையா யில்லாம லிருக்கலாம். ஆனால் பொதுத் தேர்தலில் இந்தியாவின் பெரும் பகுதியில் காங்கிரஸ் வெற்றி பெற்ற வேளை அதிர்ஷ்ட வேளை என்பதில் ஐயமில்லை. பண்டித ஜவாஹர்லால் நேரு பொதுத் தேர்தல் பிரசாரத்தை முடித்துக் கொண்டு புதுடில்லியில் பிரவேசித்த போது அதிர்ஷ்டத்துக்கு அறிகுறியான நரி குறுக்கே போயிருந்தாலும் போயிருக்கலாம். யார் கண்டது!

விலைவாசிகள் இறங்குகின்றன என்றால், ரூபாயின் மதிப்பு உயர்கிறது என்றும் ஏற்படும். இந்தியாவின் ரூபாய் மதிப்பு உயர்ந்தால் இந்தியாவின் பொருளாதார நிலைமை உயர்வதாகும்.

இவ்விதம் ஏற்படும் மாறுதலின் போது வர்த்தகர்கள் பலர் கஷ்டமடையக் கூடுந்தான். அவர்களுக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஆனால் தேசத்தின் மொத்த நன்மையை முன்னிட்டு அவர்கள் அதைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். தேசம் முழுவதும் பொருளாதாரத் துறையில் நன்மை அடைந்தால் அதில் வர்த்தகர்களுக்கும் பங்கு உண்டு அல்லவா!

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 13

## விஷ பாணம்

அந்த இடத்தில், அந்த நேரத்தில், தேவராளனைப் பார்த்ததும், வந்தியத்தேவனுடைய உள்ளம் சிறிது துணுக்குற்றது. கடம்பூர் அரண்மனையில் தேவராளன் வெறியாட்டம் ஆடியதும் அப்போது அவன் கூறிய மொழிகளும் நினைவு வந்தன. நடுக்கடலில் சுழற்காற்று சுழற்றிக் கொண்டிருந்த வேளையில் ரவிதாஸனும் தேவராளனும் சொன்ன செய்திகளும் ஞாபகத்துக்கு வந்தன. அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்று கண்டுபிடிப்பது கடினம். ஆனாலும் அவர்கள் ஏதோ ஒரு மர்ம பயங்கரமான சதிச் செயலில் ஈடுபட்டவர்கள் என்பது நிச்சயம். அவர்களில் ஒருவனிடம் இச்சமயம், அதுவும் இந்த நிர்மானுஷ்யமான இடத்தில், அகப்பட்டுக் கொண்டோமே என்று நினைத்தான். அவனிடமிருந்து தப்பிக் குதிரையை வேகமாகத் தட்டிவிட்டுக் கொண்டுபோய் விடலாமா என்று ஒரு கணம் எண்ணினான். அந்த எண்ணத்துடன் சுற்று முற்றும் பார்த்தான். தூரத்தில் தீயின் வெளிச்சம் தெரிந்தது. அது சுடுகாடாய்த்தான் இருக்கவேண்டும். ஏதோ ஒரு மண்ணுடல் தீக்கிரையாகிக் கொண்டிருக்கிறது. அந்த மண்ணுடலில் உயிர் இருந்த காலத்தில் எத்தனை எத்தனை ஆசாபாசங்களால் அது அலைப்புண்டிருக்கும்? எத்தனை இன்ப துன்பங்களை அது அநுபவித்திருக்கும்!—அரை நாழிகை நேரத்தில் மிச்சம் இருக்கப்போவது ஒரு பிடி சாம்பல்தான்! உலகில் பிறந்தவர்கள் எல்லாரும் ஒருநாள் அடைய வேண்டிய கதி அதுவேதான். மன்னாதி மன்னர்களும் சரி, ஏழைப் பிச்சைக்காரனும் சரி, ஒருநாள் அக்கினிக்கு இரையாகிப் பிடி சாம்பராகப் போக வேண்டியவர்களே!

திகில் வந்தது போலவே திடீரென்று விட்டுப் போய் விட்டது. இந்த வேஷ வஞ்சகக் காரனுக்குப் பயந்து எதற்கு ஓடவேண்டும்? ஏதோ இவன் சொல்லுவதற்குத்தான் வந்திருக்கிறான். அதைக்

கேட்டு வைக்கலாமே? ஒருவேளை, கொல்லன் உலைக்களத்தில் தான் நுழைந்த போது அங்கிருந்து பின்பக்கம் சென்று மறைந்து கொண்டவன் இவன்தான் போலும்! அந்த அதிசயமான வாள்கூட இவனுடையதாக இருக்கலாம். அதன் கைப்பிடியின் அருகில் மீனின் சித்திரம் இருந்ததல்லவா? இவனுடன் கொஞ்சம் பேச்சுக் கொடுத்தால் புதிய செய்தி ஏதேனும் தெரிய வரக்கூடும்.

ஆகையால் குதிரையை மெதுவாகவே செலுத்தினான் வல்லவரையன். முதன் முதலில் புதிது புதிதாக லாடம் அடிக்கப் பெற்ற அந்தக் குதிரையும் நடப்பதற்குக் கொஞ்சம் கஷ்டப்பட்டதாகத் தோன்றியது. அதை விரட்டி யடிக்க மனம் வரவில்லை.

"இங்கே எப்படி, அப்பா, திடுதிப் பென்று வந்து முளைத்தாய்!" என்று கேட்டான் வல்லவரையன்.

"நான் அல்லவா அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்? உன்னை நடுக்கடலில் கப்பல் பாய் மரத்தோடு கட்டிவிட்டு வந்தோமே, எப்படி நீ தப்பி வந்தாய்!" என்றான் தேவராளன்.

"உனக்கு மட்டுந்தான் மந்திரம் தெரியும் என்று நினைத்தாயோ? எனக்கும் கொஞ்சம் தெரியும்!"

"மந்திரத்தில் உனக்கு நம்பிக்கை ஏற்பட்டது பற்றி எனக்கு மகிழ்ச்சி. என்னுடைய மந்திர சக்தியினால் நீ இங்கே தனியாகப் போய்க் கொண்டிருப்பாய் என்று நானும் அறிந்து கொண்டேன். அதனால் தான் நான் முன்னால் வந்து காத்திருந்தேன்."

"ஏன் காத்திருந்தாய்? என்னிடம் உனக்கு என்ன காரியம்?"

"நீயே யோசித்துப் பார்! அல்லது மந்திர சக்தியினால் கண்டுபிடி!"

"உங்களுடைய இரகசியங்களை நடுக்கடலில் என்னிடம் நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்பதும் எனக்குத் தெரியாது. ஆனாலும் அந்த இரகசியங்களை நான் மறந்துவிடத் தீர்மானித்து விட்டேன். யாரிடமும் சொல்லப் போவதில்லை..."

"அதைப்பற்றி நானும் கவலைப்படவில்லை. எப்போது நீ அந்த இரகசியங்களை யாரிடமாவது சொல்லலாம் என்று நினைக்கிறாயோ, அப்போது உன் நாக்கு துண்டிக்கப்படும். நீ ஊமையாவாய்!"

**வ**ந்தியத் தேவனுக்கு உடல் சிலிர்த்தது. தஞ்சையிலும் இலங்கையிலும் அவன் சந்தித்த ஊமைப் பெண்களைப் பற்றிய நினைவு வந்தது. சற்று நேரம் சும்மா நடந்தான். இந்தப் பாவி எதற்காக நம்மைத் தொடர்ந்து வருகிறான்? இவனிடமிருந்து தப்பிச் செல்லுவதற்கு என்ன வழி? கோடிக்கரையிலிருந்தது போல் இங்கேயும் சேற்றுப் பள்ளம் இருந்தால் எவ்வளவு உபயோகமாயிருந்திருக்கும்? அல்லது ஆற்றில் பிடித்துத் தள்ளி விட்டுப் போகலாமா? அதில் பயனில்லை. ஆற்றில் தண்ணீர் அதிகம் கிடையாது. வேறு வழி ஒன்றும் இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது, உடைவாள். அதை எடுக்க வேண்டியதுதான்.

"தம்பி! நீ என்ன நினைக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் அது கை கூடாது. வீண் முயற்சியில் தலையிடாதே!"

வந்தியத் தேவன் பேச்சை மாற்ற விரும்பினான். அவனிடமிருந்து தப்புவதற்கு வழி யோசிக்கச் சிறிது சாவகாசம் வேண்டும். அதுவரை ஏதேனும் பேச்சுக் கொடுத்து வரவேண்டும்.

"உன் கூட்டாளி ரவிதாஸன் எங்கே?"

தேவராளன் ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்து விட்டு, "அது உனக்கல்லவா தெரிய வேண்டும்? ரவிதாஸன் எங்கே?" என்று கேட்டான்.

வந்தியத் தேவன் திடுக்கிட்டான். ரவிதாஸனைப் பற்றிய பேச்சைத் தான் எடுத்திருக்கக் கூடாது; எடுத்தது தவறு. ரவிதாஸனை இவன் பார்த்துப் பேசிவிட்டு நம்மை ஆழம் பார்க்கிறானா? அல்லது...

"என்ன, தம்பி, சும்மா இருக்கிறாய்? ரவிதாஸன் எங்கே என்று சொல்ல மாட்டாயா? போனால் போகட்டும்! அந்த ஓடக்காரப் பெண், பூங்குழலி எங்கே? அதையாவது சொல்."

வந்தியத்தேவன் பாம்பை மிதித்தவன் போல் பதறினான். மேலே பேசுவதற்கே அவனுக்குத் தயக்கமாயிருந்தது.

"அவளைப் பற்றியும் நீ ஒன்றும் சொல்ல மாட்டாயாக்கும். போனால் போகட்டும். அவளை நீ காப்பாற்ற நினைப்பதற்குத் தக்க காரணம் இருக்கலாம். தம்பி! சற்று முன்னால் ஒரு காதல் பாட்டுப் பாடினாயே? அவளை நினைத்துத்தான் பாடினாயா?"

"இல்லை; சத்தியமாய் இல்லை!" என்று வல்லவரையன் பரபரப்போடு கூறினான்.

"ஏன் உனக்கு இவ்வளவு பரபரப்பு? ஏன் இவ்வளவு ஆத்திரம்?"

"சரி, சரி! அதைப்பற்றி யெல்லாம் பேசிக் கொண்டிருக்க இப்போது அவகாசம் இல்லை. ஏன் என் குதிரையின் முகக் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய்? விட்டு விடு! நான் போகிறேன். அவசரக் காரியம் இருக்கிறது."

"நான் வந்த காரியத்தை நீ இன்னும் கேட்கவில்லையே?"

"சொன்னால்தானே கேட்கலாம்?"

"இந்த முல்லையாற்றங் கரைக்கு ஓர் அதிசய சக்தி உண்டு. இங்கே யார் எதை விரும்புகிறார்களோ, அது உடனே அவர்களுக்குச் சித்திக்கும்."

"நான் ஒன்றும் விரும்பவில்லையே?"

"அது பொய்! நீ யாரை நினைத்துக் கொண்டு உன் காதல் பாட்டைப் பாடினாயோ அவள் உன்னைப் பார்க்க விரும்புகிறாள். நீ இஷ்டப்பட்டால்பார்க்கலாம்."

"எப்போது?"

"இன்றிரவே பார்க்கலாம்."

"இது என்ன கதை?"

"கதை அல்ல, தம்பி! அதோ பார்!" என்று தேவராளன் சுட்டிக் காட்டினான். அவர்கள் சென்ற வழியில் சற்றுத் தூரத்தில் ஏதோ ஒரு பொருள் மங்கலாகத் தெரிந்தது. வந்தியத் தேவன் உற்றுப் பார்த்தான். அது ஒரு பல்லக்கு — மூடு பல்லக்கு என்று அறிந்தான்.

ஆகா! அந்தப் பல்லக்கு! எங்கே பார்த்திருக்கிறோம்? ஏன்? பழுவூர் இளைய ராணியின் பல்லக்கு அல்லவா அது? ஒரு வேளை அதற்குள்ளே நந்தினி இருக்கிறாளா, என்ன? அதைத் தெரிந்து கொள்ளும் ஆவலை அவனால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

குதிரையை அந்தப் பல்லக்கின் அருகில் கொண்டு போய் நிறுத்தினான். பனைச் சித்திரம் போட்ட பல்லக்கின் மூடுதிரை தெரிந்தது. திரை அசைவது போலும் இருந்தது.

உடனே வந்தியத் தேவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான்.

அதே கணத்தில் தேவராளன் தொண்டையிலிருந்து ஒரு விசித்திரமான சத்தம் வெளி வந்தது.

அக்கம் பக்கத்தி லிருந்த புதர்களின் மறைவிலிருந்து ஏழெட்டுப் பேர் திடும் திடும் என்று எழுந்து பாய்ந்து வந்தார்கள். வந்தியத் தேவன் மீது விழுந்தார்கள். அவனால் மீறி அசையவும் முடியாதபடி பிடித்துக் கொண்டார்கள். கால்களையும் கைகளையும் துணியினால் கட்டினார்கள். கண்ணையும் ஒருவன் கட்டினான். உடைவாளை ஒருவன் பலவந்தமாக எடுத்துக் கொண்டான். பிறகு வந்தியத் தேவனை அந்தப் பல்லக்கினுள்ளே தூக்கிப் போட்டார்கள். சிலர் உடனே பல்லக்கைத் தூக்கிக் கொண்டு விரைந்து நடந்தார்கள். மற்றவர்கள் முன்னும் பின்னும் சென்றார்கள். தேவராளன் முன்னால் வழி காட்டிக் கொண்டு சென்றான். ஒருவன் குதிரையைப் பிடித்துக் கொண்டு நடந்தான்.

இவ்வளவும் அதி விரைவில் நடந்து விட்டன. 'கண் மூடித் திறக்கும் நேரத்தில்' என்று சொல்லுவதும் மிகையாகாது. வந்தியத் தேவன் தன்னைப் பலர் வந்து ஏக காலத்தில் தாக்கியதும் திகைத்துப் போய் விட்டான். அந்தகைய தாக்குதலை அவன் எதிர்பார்க்கவேயில்லை. பல்லக்கில் அவனைத் தூக்கிப் போட்டு, பல்லக்கு நகர ஆரம்பித்த வரையில் அவனால் எதுவும் சிந்திக்கவும் முடியவில்லை. என்ன நடக்கிறதென்று தெரிந்து கொள்ளவும் முடியவில்லை.

ஆனால் பல்லக்கு நகர ஆரம்பித்ததும் சிறிது சிறிதாக மனம் தெளிவடைந்தது. கண்ணின் கட்டு சுலபமாக நழுவி விட்டது. கட்டி யிருந்த கைகளினால் பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு பார்த்தான். நதிக்கரையிலிருந்து குறுக்கே இறங்கிப் பல்லக்கு எங்கேயோ போகிறது என்பதை அறிந்து கொண்டான்.

அவனுடைய கையின் கட்டுக்களையும் காலின் கட்டுக்களையும் அவிழ்த்துக் கொண்டு விடுதலை பெறுவது அவ்வளவு கஷ்டமான காரியம் அன்று. பல்லக்கிலிருந்து குதிப்பதும் எளிதாகத்தான் இருக்கும். குதிரையோ பின்னால் வந்து கொண்டிருந்தது. அந்த ஏழெட்டுப் பேரையும் உதறித் தள்ளிவிட்டுக் குதிரை மீது பாய்ந்தேறிச் செல்லுவதும் அவனுக்கு முடியாத காரியமாகாது. அவ்விதம் செய்யலாமா என்று யோசித்தான். ஆனால் ஏதோ ஒன்று குறுக்கே நின்று தடை செய்தது. அந்தப் பல்லக்கினுள்ளே ஓர் அபூர்வமான மணம் சூழ்ந்திருந்தது. அது முதலில் அவனுக்கு உற்சாகத்தை அளித்தது. அதன் கவர்ச்சியிலிருந்து விடுவித்துக் கொண்டு போக எளிதில் மனம் வரவில்லை. இந்தப் பல்லக்கு தன்னை எங்கே கொண்டு போய்ச் சேர்க்கப் போகிறது? நந்தினியிடந்தான் சேர்க்கும் என்று எண்ணுவதற்குக் காரணங்கள் இருந்தன. அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் இலேசாகத் தலைகாட்டியது. வர வர அது




பெரும் ஆர்வமாக வளர்ந்தது. அதற்கு எவ்வளவோ ஆட்சேபங்கள் தோன்றின. ஆட்சேபங்களை யெல்லாம் மீறி ஆசை விசுவ ரூபம் கொண்டது. என்னதான் செய்து விடுவான் நம்மை? என்னத்துக்காகத்தான் அழைக்கிறான் என்று பார்த்து விடலாமே? ஏதாவது தெரிந்து கொள்ள முடிந்தால் தெரிந்து கொள்ளலாமே? சூழ்ச்சிக்குச் சூழ்ச்சி செய்யத் தன்னால் முடியாமலா போய்விடும்? மறுபடியும் அவனைப் பார்க்கும்படியான

போவதில்லை. அங்கே போவதும் அபாயகரம். அதைக் காட்டிலும் வழியிலேயே பார்த்து விடுவது எளிதான காரியம். இன்னும் ஒரு தடவை அவனையும் பார்த்துத்தான் வைக்கலாமே?......

ஆம்; ஆம்! நந்தினியைப் பார்க்க வேண்டும் என்பதற்கு இன்னொரு அவசியமான காரணமும் இருந்தது.

இலங்கையில் அவன் பார்த்த அந்த

எவ்வளவோ ஆட்சேபங்கள் தோன்றின. ஆட்சேபங்களை யெல்லாம் மீறி ஆசை விசுவ ரூபம் கொண்டது. என்னதான் செய்து விடுவான் நம்மை? என்னத்துக்காகத்தான் அழைக்கிறான் என்று பார்த்து விடலாமே? ஏதாவது தெரிந்து

போவதும் அபாயகரம். அதைக் காட்டிலும் வழியிலேயே பார்த்து விடுவது எளிதான காரியம். இன்னும் ஒரு தடவை அவனையும் பார்த்துத்தான் வைக்கலாமே?......



இவ்விதம் வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவன் தலை சுழன்றது. தூக்கம் வருவது போலத் தோன்றியது. இல்லை, இல்லை; இது தூக்கம் இல்லை. பகலிலேதான் அவ்வளவு நேரம் தூங்கியாகி விட்டதே! இது ஏதோ மயக்கம். இந்தப் பல்லக்கில் சூழ்ந்துள்ள மணந்தான் இப்படி நம்மை மயக்குகிறது. ஐயோ! இது என்ன பயங்கர அபாயம்! பல்லக்கிலிருந்து குதித்துவிட வேண்டியதுதான்!

வந்தியத்தேவன் கைக் கட்டை அவிழ்த்துக் கொள்ள முயன்றான்; முடியவில்லை. கைகள் அசையவேயில்லை. எழுந்து உட்கார முயன்றான்; அதுவும் முடியவில்லை. கால்களை அடித்துக்கொள்ளப் பார்த்தான்; கால்களும் அசைய மறுத்தன. அவ்வளவுதான்! கண்ணிமைகள் மூடிக் கொண்டன; அறிவு விரைவாக மங்கியது; மயக்கம் அவனை முழுதும் ஆட்கொண்டது.

* * *

**வ**ந்தியத் தேவன் மயக்கம் தெளிந்து கண் விழித்த போது, பழைய நினைவுகள் வந்து, பல்லக்கிலிருந்து குதிப்பதற்கு முயன்றான். ஆனால் விந்தை! விந்தை! அவன் இப்போது பல்லக்கில் இல்லை! விசாலமான ஓர் அறையில் இருந்தான். அந்த அறை தீபங்களினால் பிரகாசமாக விளங்கிற்று. இங்கேயும் ஏதோ ஒரு மணம் சூழ்ந்து இருந்தது; ஆனால் பழைய மாதிரி மணம் இல்லை. அகில் புகையின் மணம் போலத் தோன்றியது. முன்னே அவன் அனுபவித்தது அறிவை மயக்கிய மணம். இது அறிவைத் தெளிவு செய்த மணம். படுத்திருந்த ஆசனத்திலேயே எழுந்து உட்கார்ந்தான்; சுற்று முற்றும் பார்த்தான். கதவு ஒன்று திறந்தது. வந்தியத் தேவன் ஆவலுடன் பார்த்தான்.

திறந்த கதவின் வழியாக நந்தினி வந்தாள். வந்தவளைக் கண் கொட்டாமல் அவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய வியப்புக்கும் திகைப்புக்கும் பல காரணங்கள் இருந்தன. வர்ணனைக் கெட்டாத அவளுடைய சௌந்தர்யம் ஒரு காரணம். எதிர்பாராத முறையில் அவளைச் சந்திக்கும்படி நேர்ந்தது இன்னொரு காரணம். இலங்கையில் அவன் பார்த்திருந்த மூதாட்டியின் உருவத்தோடு இந்த யுவதியின் உருவம் எவ்

வளவு ஒத்திருக்கிறது என்ற எண்ணம் மற்றொரு காரணம். உருவங்கள் ஒத்திருக்கின்றனவா? அல்லது அந்த மூதாட்டியேதான் உயரிய ஆடை ஆபரணங்களை அணிந்தபடியிருந்தால் இப்படித் தோற்ற மளிக்கிறாளா?

இனிய கிண் கிணி நாதக் குரலில் "ஐயா! நீர் மிகவும் நல்லவர்!" என்று கூறினாள் நந்தினி.

வந்தியத்தேவன் "வந்தனம்!" என்றான்.

"நல்லவருக்கு அடையாளம் சொல்லாமற் போவதுதானே? தஞ்சை அரண்மனையிலிருந்து என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே போய் விட்டீர் அல்லவா!" என்றாள் நந்தினி.

வந்தியத் தேவன் நகைத்தான்.

"தஞ்சைக் கோட்டைக்குள் வருவதற்கு உமக்கு நான் உதவி செய்தேன். என் கை விரலிலிருந்து பனை முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொடுத்தேன். அதை என்னிடம் திருப்பிக் கொடுத்து விட்டாவது போயிருக்க வேண்டாமா?" என்று கேட்டாள்.

வந்தியத்தேவன் வெட்கித்து மௌனமாக நின்றான்.

"எங்கே? இப்போதாவது அதைத் திருப்பிக் கொடுக்கலாம் அல்லவா? அதன் உபயோகம் தீர்ந்து போயிருக்குமே? மறுபடியும் தஞ்சைக் கோட்டைக்கு வரும் எண்ணம் உமக்கு இல்லைதானே?" என்று கூறி நந்தினி தன் அழகிய மலர்க் கரத்தை நீட்டினாள்.

"தேவி! அந்த முத்திரை மோதிரத்தை இலங்கைத் தளபதி பூதி விக்கிரம கேசரி கைப்பற்றிக் கொண்டு விட்டார். ஆகையால் அதைத் திருப்பிக் கொடுக்க இயலவில்லை. மன்னிக்க வேண்டும்" என்றான் வந்தியத்தேவன்.

"என்னுடைய ஜன்ம சத்துருவிடம் நான் உமக்குக் கொடுத்த மோதிரத்தைக் கொடுத்து விட்டீர் அல்லவா! மிக்க நன்றியுள்ள மனிதர் நீர்."

"நானாகக் கொடுத்து விடவில்லை. பலவந்தமாக எடுத்துக் கொண்டார்கள்."

"வாணாதி ராயர் குலத்தில் உதித்த வீராதி வீரர் பலவந்தத்துக்கு உட்பட்டு ஒரு காரியம் செய்தீரா? என்னால் நம்ப முடியவில்லை!"

"அம்மணி! இங்கே இச்சமயம் நான் வந்திருப்பதும் பலவந்தம் காரணமாகத்தானே? தங்களுடைய ஆட்கள்?..."

"உண்மையாகச் சொல்லும், ஐயா! நன்றாய் நினைத்துப் பார்த்துச் சொல்லும்! பலவந்தத்தினால் மட்டும் நீர் இங்கே வந்தீரா? இஷ்டப்பட்டு வர வில்லையா? பல்லக்கில் ஏற்றப்பட்ட பிறகு கீழே குதித்து ஓடுவதற்கு உமக்குச் சந்தர்ப்பம் இல்லையா?" என்று நந்தினி கேட்ட கேள்விகள் கூரிய அம்புகளைப் போல் வந்தியத்தேவன் நெஞ்சைத் துளைத்தன.

"ஆம்; இஷ்டப்பட்டுத்தான் வந்தேன்" என்றான்.

"எதற்காக வந்தீர்?"

"தாங்கள் எதற்காக என்னை அழைத்து வரச் செய்தீர்கள்?"

"என் முத்திரை மோதிரத்தைத் திருப்பிக் கேட்பதற்காக!"

"அது மட்டுந்தானா?"

"இன்னும் ஒரு காரணமும் இருக்கிறது. என் கணவரின் பாதுகாப்புக்கு உட்பட்ட பொக்கிஷ நிலவறையில் நீர் அன்றிரவு இருந்தீர் அல்லவா?"

வந்தியத்தேவன் திடுக்கிட்டான்.

"எனக்குத் தெரியாது என்று எண்ணினீர்? அழகுதான்! எனக்குத் தெரிந்திராவிட்டால் அன்றிரவு நீர் தப்பிச் சென்றிருக்க முடியுமா?"

"தேவி!..."

"ஆம்; எனக்குந் தெரியும். பெரிய பழுவேட்டரையருக்கும் தெரியும். உம்மை அங்கேயே கொன்று போட்டு விடும்படி பழுவேட்டரையர் சுரங்க வழிக் காவலனுக்குக் கட்டளையிட்டார். அவர் அப்பால் சென்றதும் நான் அந்தக் கட்டளையை மாற்றி விட்டேன். அதனால் நீர் பிழைத்தீர். உம்முடைய அழகான நண்பன் ஆபத்துக்கு உள்ளானான். இல்லாவிடில், அந்தப் பொக்கிஷ நிலவறையில் முத்துக் குவியல்களுக்குப் பக்கத்தில் உம்முடைய எலும்புகள் இப்போது கிடக்கும்!"

**வ**ந்தியத்தேவன் வியப்புக் கடலில் மூழ்கினான். அவள் கூறியவையெல்லாம் உண்மை யென்று அவனால் நம்பமுடியவில்லை. உண்மையில்லாவிட்டால் தான் அன்று அங்கு ஒளிந்திருந்தது எப்படித் தெரிந்தது? சம்பிரதாயத்துக்காவது நன்றி கூறவேண்டியது அவசியம் என்று கருதி "அம்மணி...!" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"வேண்டாம்; மனதில் இல்லாததை வெளியில் எதற்காகச் சொல்லப் பார்க்கிறீர்? எனக்கு நன்றி செலுத்த முயல வேண்டாம்!"

"இல்லை, தேவி..."

"உம்முடைய உயிரை அன்று காப்பாற்றியதைப் பற்றி எதற்காகச் சொன்

னேன். தெரியுமா? உம்முடைய நன்றியை எதிர்பார்த்தல்ல. மறுபடியும் அந்தச் சுரங்க வழியை உபயோகிக்கப் பார்க்க வேண்டாம் என்று எச்சரிப்பதற்காகத்தான். அங்கே இப்போது மிகவும் வலுவான காவல் போட்டிருக்கிறது. தெரிகிறதா?''

''மறுபடியும் அந்தப் பக்கம் போகும் உத்தேசமே எனக்கு இல்லை.''

''அது ஏன் இருக்கப் போகிறது? உதவி செய்தவர்களை நினைக்கும் வழக்கமேதான் உமக்கு இல்லையே? உம்மால் உம்முடைய சிநேகிதன் ஆபத்துக்கு உள்ளானான். அவனை என்னுடைய அரண்மனைக்கே எடுத்து வரச் செய்து அவனுக்கு வைத்தியம் பண்ணுவித்துக் குணப்படுத்தி அனுப்பினேன். அதில் உமக்குத் திருப்தி தானே? அல்லது நம்பிக்கைத் துரோகத்தைப் போல் சிநேகத் துரோகமும் உம்முடன் பிறந்ததா?''

நந்தினியின் வார்த்தை ஒவ்வொன்றும் விஷபாணத்தைப் போல் வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் ஊடுருவிச் சென்றது. அவன் துடிதுடித்து மௌனமாயிருந்தான்.

''உம்முடன் கோடிக்கரைக்கு வந்த வைத்தியர் மகனைத்தான் உமக்குப் பதிலாகப் பிடித்துக் கொடுத்து அனுப்பினீர். அவன் என்ன ஆனான் என்று விசாரித்தீரா?''

''தங்களைக் கேட்க எண்ணினேன்.''

''சொல்லுகிறேன்; ஆனால் உம்முடன் இலங்கையிலிருந்து புறப்பட்ட இளவரசர் அருள்மொழி வர்மர் என்ன ஆனார்? அதைச் சொன்னால் நான் வைத்தியர் மகனைப் பற்றிச் சொல்லுவேன்.''

வந்தியத் தேவனுக்கு உடம்பை ஒரு உலுக்கு உலுக்கிப் போட்டது. இளவரசரைப் பற்றி அறிவதற்காகத்தான் தன்னை இவள் இப்படிப் பாடாய்ப் படுத்தினாளோ என்று தோன்றியது. ஏமாந்து போகக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

''அரசி! அதைப் பற்றி மட்டும் என்னைக் கேட்க வேண்டாம்'' என்றான்.

''ஆம்! அதைப் பற்றி மட்டும் கேட்கக் கூடாது தான்! கேட்டாலும் உம்மிடமிருந்து மறுமொழி வராது என்று எனக்குத் தெரியும். உம்முடைய காதலி எப்படியிருக்கிறாள்? அதைப் பற்றி யாவது எனக்குச் சொல்லலாமா?''

வந்தியத்தேவனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. ''யாரைச் சொல்லுகிறீர்கள்? ஜாக்கிரதை!'' என்றான்.

''ஆகா! நான் ஜாக்கிரதையாகத்தான் இருக்கிறேன். அந்தப் பழையாறை மகாராணியைச் சொல்லுவதாக எண்ண வேண்டாம். அவள் உம்மைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டாள். தன் காலில் ஒட்டிய தூசிக்குச் சமானமாக உம்மை மதிப்பாள். உம்மை இலங்கையில் கொண்டு சேர்த்துத் திருப்பியும் அழைத்து வந்தாளே! அந்த ஓடக்காரப் பெண்ணைப் பற்றிக் கேட்கிறேன். பூங்குழலி உமது காதலி அல்லவா?''

''இல்லை, இல்லவே இல்லை! அவளுடைய காதலர்களை அவளே எனக்குக் காட்டினாள். நள்ளிரவில் கோடிக்கரைச் சதுப்பு நிலத்தில் கிளம்பும் கொள்ளி வாய்ப் பிசாசுகளை எனக்குக் காட்டினாள். அவர்கள்தான் தன்னுடைய காதலர்கள் என்று சொன்னாள்.''

''அவள் பாக்கியசாலி! ஏனெனில் அவளுடைய காதலர்கள் ஒளி வடிவம் பெற்றிருக்கிறார்கள். பிரகாசமாகக் கண் முன் தோன்றுகிறார்கள். என்னுடைய காதலர்களோ இருள் வடிவமானவர்கள்; உருவம் அறிய முடியாதவர்கள். இருள் அடைந்த பாழும் மண்டபத்தில் நீர் எப்போதாவது நள்ளிரவு நேரத்தில் படுத்திருந்ததுண்டா? வௌவால்களும் ஆந்தைகளும் இறகுகளைச் சடபட வென்று அடித்துக் கொண்டு அந்த இருண்ட மண்டபங்களில் உருத்தெரியா வடிவங்களாகப் பறந்து திரிவதைப் பார்த்ததுண்டா? அம்மாதிரி வடிவங்கள் என் உள்ளமாகிய மண்டபத்தில் ஓயாமல் பறந்து அலைகின்றன. இறகுகளை அடித்துக் கொள்கின்றன. என் நெஞ்சைத் தாக்குகின்றன. என் கன்னத்தை இறகுகளால் தேய்த்துக் கொண்டு செல்கின்றன! அந்த இருள் வடிவங்கள் எங்கிருந்து வருகின்றன? எங்கே போகின்றன? ஏன் என்னைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுகின்றன? ஐயோ! உமக்குத் தெரியுமா?'' — இவ்விதம் கூறி விட்டு நந்தினி வெறி கொண்ட கண்களால் அங்குமிங்கும் பார்த்தாள்.

---

அட்டைப்பட விளக்கம்

**இந்த இதழ் 'கல்கி' அட்டையில் வெளியாகியிருக்கும் காட்சி, பொன்னியின் செல்வன் கதையில் அடுத்து வரும் அத்தியாயங்களில் நிகழும் சம்பவத்தைச் சித்திரிக்கிறது.**

# சென்னைப் பிரச்னை!




சென்னை அரசியல் நிலைமை பிரதம மந்திரி நேருவை குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது.

வந்தியத்தேவனுடைய வயிர நெஞ்சமும் கலங்கிப் போயிற்று. ஒரு பக்கம் இரக்கமும் இன்னொரு பக்கம் இன்னதென்று தெரியாத பயமும் அவன் மனதில் குடிகொண்டது.

"தேவி! வேண்டாம்; கொஞ்சம் சாந்தி அடையுங்கள்!" என்றான்.

"என்னைச் சாந்தி அடையும்படி சொல்வதற்கு நீர் யார்?" என்று கேட்டாள் நந்தினி.

"நான் வாணர் குலத்தில் வந்த ஏழை வாலிபன். தாங்கள் யார், தேவி!"

"நான் யார் என்று கேட்கிறாய்! அது தான் எனக்கும் தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்கத் தான் முயன்று கொண்டிருக்கிறேன். நான் யார்? மானிடப் பெண்ணா? அல்லது பேயா, பிசாசா என்று கேட்கிறாயா?"

"இல்லை, இல்லை! தெய்வ லோகத்திலிருந்து தவறி விழுந்த தேவப் பெண்ணாகவும் இருக்கலாம் அல்லவா? தெய்வ சாபத்தினால்......"

"ஆம்; தெய்வ சாபம் என் பேரில் ஏதோ இருக்கிறது. அது என்னவென்று மட்டும் தெரியவில்லை. நான் யார், எதற்காகப் பிறந்தேன் என்பதை அறியேன். இதுவரையில் ஒரே ஒரு சூசகத்தை மட்டும் தெய்வம் எனக்கு அளித்திருக்கிறது. இதோ பார்!" என்று கூறி நந்தினி அவன் அருகில் இருந்த வாளை எடுத்துக் காட்டினாள். புதிதாகச் செப்பனிடப்பட்ட அந்தக் கூரிய வாள் தீப வெளிச்சத்தில் பளபளவென்று ஜொலித்துக் கண்ணைப் பறித்தது.

**வ**ந்தியத்தேவன் அந்த வாளைப் பார்த்தான். பார்த்த உடனே அது கொல்லன் பட்டறையில் தான் பார்த்த வாள் என்பதைத் தெரிந்து கொண்டான். இது வரையில் நந்தினியின் வார்த்தைகளாகிற விஷ பாணங்களினால் அவன் துடி துடித்துக் கொண்டிருந்தான். இப்போது இரும்பினால் செய்த வாளாயுதத்தைப் பார்த்ததும் அவனுடைய மனம் திடப்பட்டது. ஏனெனில் வாள், வேல் முதலிய ஆயுதங்கள் அவனுக்குப் பழக்கப்பட்டவை. பிறந்தது முதல் அவனுடன் உறவு பூண்டவை. ஆகையால் பயமில்லை! நந்தினி அந்த வாளைத் தன் பேரில் பிரயோகிப்பதாயிருந்தாலும் பயம் கிடையாது!

"தேவி! பார்த்தேன்; வாளைப் பார்த்தேன். வேலைப்பாடு அமைந்த வாள்; அரச குலத்துக்கு உரிய வாள், வீராதி வீரர்களின் கைக்கு உகந்த வாள். அது மெல்லியல் கொண்ட தங்கள் அழகிய கையில் எப்படி வந்தது? அதன் மூலம் தெய்வம் தங்களுக்கு அளித்திருக்கும் சூசகந்தான் என்ன?" என்று கேட்டான்.

# கோலினாஸ் புன்னகையில் வெற்றி நடனமாடுகிறது!

'கோலினாஸ்' வேறெந்த டெண்டல் க்ரீமையும் விட எவ்வளவோ அதிக சிக்கனம் வாய்ந்தது—ஏனெனில், ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது.

நுரைதான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!




இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:

ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்., பம்பாய்!

கிளைகள்: கல்கத்தா - மதராஸ் - டில்லி



# Advertisers... get the TRUTH about the media you use !

As an advertiser, it is vital for you to know exactly how many readers you get for each rupee spent on advertising.

More than 125 leading publications are now members of the Audit Bureau of Circulations — enough to conduct a full-scale, 13 language national advertising campaign in India, Pakistan and Ceylon. Their circulation figures are subject to re-check at any time by ABC appointed auditors, and are passed on as half-yearly confidential certificates to ABC members.

If you want to know the truth about your advertising media, write today for full details of ABC membership !

**AUDIT BUREAU OF CIRCULATIONS LTD.**
Mubarak Manzil, Apollo Street
Fort, Bombay

The following advertisers and advertising agencies are already members of the ABC :—

ADVERTISERS :

Allied photographics Ltd., E. M. Allcock & Mohatta Ltd. Aspro Ltd. England. Atlantis (East) Ltd. Balmer Lawrie & Co. Ltd. Bombay Mutual Life Assurance Society Ltd. Boots Pure Drug Co. (India) Ltd. Burmah-Shell Oil Storage & Distributing Company of India Ltd. Caltex (India) Ltd. Central Tea Board. Corn Products Co. (India) Ltd. Dunlop Rubber Co. (India) Ltd. Glaxo Laboratories (India) Ltd. Godrej & Boyce Mfg. Co. Ltd. Imperial Chemical Industries (India) Ltd. Imperial Tobacco Co. of India Ltd. India Tyre & Rubber Co. (India) Ltd. Lever Brothers (India) Ltd. Lipton Ltd. Mullar & Phipps (India) Ltd. National Carbon Co. (India) Ltd. Parle Products Manufacturing Co. Ltd. Punjabi Chandu Halwai Karachiwala. Shalimar Paint, Colour & Varnish Co. Ltd. Tata Oil Mills Co. Ltd. Volkart Brothers.

ADVERTISING AGENCIES :

Advertising & Sales Promotion Co. Everest Advertising Ltd. Grant Advertising Inc. Greens' Advertising Service Agents. D. J. Keymer & Co., Ltd. Lintas Ltd. National Advertising Service Ltd. Press Syndicate Ltd. Shilpi Ltd. Sista's Ltd. F. D. Stewart Ltd. L. A. Stronach & Co. (India) Ltd. J. Walter Thompson Company (Eastern) Ltd.

**Inserted by the "KALKI" Madras**

THE TAMIL WEEKLY PUBLICATION WITH ABC CERTIFIED CIRCULATION

# "மாயவித்தை செய்கிறார்!"

[ ரா. கி. ]

ஸ்ரீ டி. எஸ். சேதாபதி அவர்களை நாலு வருஷத்துக்கு முன்னால் கல்கத்தாவில் முதன் முதலாகச் சந்தித்தேன். அப்போது அவர் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் தலைவரா யிருந்தார். அவருடைய தலைமையில் நடந்த கூட்டங்களில் கல்கத்தாவிலுள்ள தமிழ் அன்பர்கள் பலரையும் பார்த்து மகிழும் பாக்கியம் கிடைத்தது. பின்னர் தமிழ் நாட்டில் நடந்த பாரதி விழாக்கள், கம்பர் விழாக்கள் ஆகியவற்றில் ஸ்ரீ சேதாபதி அவர்களைச் சில முறை சந்திக்கும்படி நேர்ந்தது. அவருடைய தமிழபிமானம் எத்தனை நூறு மைல் தூரம் அவரைப் பிரயாணம் செய்து அம்மகாநாடுகளுக்கு வந்து சேரப் பண்ணியிருக்கிறது என்று வியக்கவும் நேர்ந்தது.

சென்ற வாரத்தில் ஸ்ரீ சேதாபதி அவர்களைச் சென்னையில் பார்க்க நேரிட்ட போது மகிழ்ச்சியுடன் வேறு வித வியப்பும் அடைந்தேன். "நமக்குத் தெரியாமல் இங்கே தமிழ் விழா எதுவேனும் நடக்கிறதா?" என்பது தான் வியப்பு. அதை அவரிடமே கேட்டுவிட்டேன். "இல்லை; இந்தத் தடவை தமிழ் விழாவுக்காக வரவில்லை. மின்சார சாமான் உற்பத்தியாளர் சங்க மகாநாட்டுக்காக வந்தேன்" என்று சொன்னார். அதிலிருந்து அத்தகைய சங்கம் ஒன்று நீடித்து வேலை செய்து வருகிற தென்றும், அந்தச் சங்கத்துக்கு நடைமுதல் வருஷத்துத் தலைவர் ஸ்ரீ சேதாபதி என்றும் தெரிந்து கொண்டேன். பிறகுதான் ஞாபகம் வந்தது. ஸ்ரீ சேதாபதி தமிழன்பர் என்பது மட்டுமல்ல; தொழில் உலகத்தில் அவர் ஒரு முக்கியமான ஸ்தானம் வகிப்பவர் என்பது. பெரிய பட்டம் பெற்ற மின்சார சாஸ்திர என்ஜினியர் அவர். கல்கத்தாவில் மின்சாரக் கம்பிகள் உற்பத்தி செய்யும் பெரிய தொரு கம்பெனி இருக்கிறது. The National Insulated Cable Co of India Ltd என்ற அந்தக் கம்பெனியின் மானேஜர் ஸ்ரீ சேதாபதி. இது முன்னமே எனக்குத் தெரிந்த விவரந்தான். ஆயினும் அவர் வகிக்கும் பதவியும் பொறுப்பும் எவ்வளவு முக்கியமானவை என்பதைச் சென்னையில் சென்ற வாரம் நடந்த மின்சார உற்பத்தியாளர் சங்கத்தின் மகாநாட்டுக்குப் போயிருந்த போதுதான் நன்கு தெரிந்துகொள்ள முடிந்தது.

மேற்படி மகா நாட்டில் ஒருவர் தப்பித் தவறி இடறி விழுந்தால் ஒரு பிரபல மின்சார என்ஜினியர், ஒரு நுட்ப சாஸ்திர வல்லுனர், அல்லது ஒரு தொழிற்சாலை அதிபர் மேலே தான் விழவேண்டி யிருக்கும். அவ்வளவு முக்கியமான பிரமுகர்கள் அங்கே கூடியிருந்தார்கள். வெள்ளைக்காரர்கள் மட்டும் சுமார் இருபது பேர் இருந்தார்கள். சென்னை மின்சார இலாகா என்ஜினியர் ஸ்ரீ ஜி. சுந்தரம் அவர்களின் புகழ் புது டில்லி வரையில் பரவி ஓங்கி நிற்பதாகும். அத்தகைய கீர்த்திமானைப் பார்க்க வேண்டு மென்ற ஆசை எனக்கு வெகு நாளாக இருந்தது. அன்றைக்குத்தான் அது கை கூடியது. குரோம்பேட்டையில் 'டெக்னலஜி' ஸ்தாபனம் நடத்தி நூற்றுக் கணக்கான நம் இளைஞர்களுக்கு நுட்ப சாஸ்திரப் பயிற்சி அளித்து வரும் ஸ்ரீ சி. ராஜம் அங்கே இருந்தார். சமீபத்தில் பார்லிமெண்டு சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிர்ஷ்டசாலியான ஸ்ரீ பி. நடேசன் அங்கேயிருந்தார். சென்னையில் சைக்கிள் தொழிற்சாலை ஆரம்பித்து நடத்திவரும் ஸ்ரீ ஏ. எம். எம். முருகப்பா அங்கே யிருந்தார். கல்கத்தா ஜெனரல்

இந்தியா மின்சார உற்பத்தியாளர் மகாநாட்டுக்கு விஜயம்செய்த பிரமுகர்களை ஸ்ரீ சேதாபதி வரவேற்கிறார். இடது புறத்தில் நிற்பவர் சென்னை மின்சார இலாக்கா சீப் என்ஜினியர் ஸ்ரீ சுந்தரம்.





இந்திய மின்சார உற்பத்தியாளர் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ டி. எஸ். சிதாபதி பேசுகிறார்.

எலெக்டிரிக் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ ஸி. எம். ஷாவும், பெங்களூர் கிர்லோஸ்கர் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ குர்ஜார் என்பவரும் அங்கே பிரசன்னமா யிருந்தார்கள். இப்படியாக வடநாட்டிலிருந்து வந்தவர்களும் சென்னையைச் சேர்ந்தவர்களுமாகச் சுமார் 200 பேருக்கு மேலே அங்கே விஜயம் செய்திருந்தார்கள்.

அவர்கள் எல்லாம் வெறும் பணக்காரர்களோ, முதலாளிகளோ மட்டும் அல்ல. சாமான்களை வாங்கி விற்று லாபம் பண்ணிச் சர்க்காருக்கு வருமான வரி கொடுப்பதற்கு மூக்கால் அழுகிற வர்த்தகர்களுமல்ல. பாரத நாட்டின் தொழில் வளத்தையும் செல்வத்தையும் பெருக்கி வளர்ப்பவர்கள்; தேச முன்னேற்றத்துக்கு அத்தியாவசியமான சாமான்களை உற்பத்தி செய்பவர்கள்; வெளி தேசங்களுக்கு நம் பணம் போகாமல் அணை போட்டு நிறுத்துகிறவர்கள்; ஆயிரக் கணக்கான தொழிலாளிகளுக்கும் நடுத்தர வகுப்பாருக்கும் வேலை கொடுப்பவர்கள்; நூற்றுக் கணக்கான நம் இளைஞர்கள் நுட்ப சாஸ்திரங்களில் பயிற்சி பெற வசதி அளிப்பவர்கள். பொதுவாகத் தாய் நாட்டுக்கு இன்றியமையாத மகத்தான சேவை செய்கிறவர்கள்.

இத்தகைய பிரமுகர்கள் அடங்கிய அகில இந்தியச் சங்கம் ஒன்றுக்கு நம் தென்னிந்திய நண்பர் ஒருவர் தலைமை வகிக்கிறார் என்பது எனக்கு மிகவும் பெருமையாயிருந்தது. யோசித்துப் பார்த்தால், அப்படி ஒன்றும் ஆச்சரியமான விஷயம் அன்று. ஜாம்ஷெட்பூர் டாடா நகரில் உள்ள பிரம்மாண்டமான இரும்புத் தொழிற் சாலையில் போய்ப் பார்த்தால், தென்னிந்தியர்கள் பல பொறுப்புள்ள பதவிகளை வகிப்பதைக் காணலாம். கல்கத்தாவுக்கு அருகில் சித்தரஞ்சனில் இப்போது ரயில் என்ஜின் உற்பத்தித் தொழிற்சாலை ஆரம்பித்திருக்கிறார்களே, அங்கே போய்ப் பார்த்தாலும் தென்னிந்தியர்கள் பலர் தங்கள் திறமையினால் புகழ் பெற்றிருப்பதைக் காணலாம். பொதுவாக என்ஜினியரிங் நுட்ப சாஸ்திரத் திறமையில் தென்னிந்தியர்களின் கீர்த்தி தற்சமயம் இந்தியா தேசமெங்கும் ஓங்கி நிற்கிறது. வருங் காலத்திலும் இந்தக் கீர்த்திக்குப் பங்கம் ஒன்றும் நேராது என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை.

என்ஜினியரிங்—நுட்ப சாஸ்திரத் துறைகளில் பல பகுதிகள் இருக்கின்றன. அவற்றில் மின்சாரத்துக் கிணையான சக்தி வாய்ந்தது வேறொன்றுமில்லை. அலாவுதீன் என்பவனுக்கு ஒரு விந்தை விளக்குக் கிடைத்தது என்றும், அதைத் தொட்ட மாத்திரத்தில் நினைத்ததெல்லாம் கிட்டியது என்றும் கதை கேட்டிருக்கிறோம். மின்சார சக்தியோ அந்த விந்தை விளக்கைக் காட்டிலும் ஆயிரம் பதினாயிரம் மடங்கு விந்தையானது. மின்சார சக்தியினால் சாதிக்க முடியாத அற்புதம் ஒன்றுமேயில்லை யென்று சொல்லலாம். அத்தகைய மின்சார சக்தியை உற்பத்தி செய்வதற்குரிய இயற்கைச் சாதனங்கள் நம் நாட்டில் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றை உபயோகித்து மின்சார சக்தி உற்பத்தி செய்வதற்குரிய திட்டங்கள் பல ஏற்பட்டிருக்கின்றன: இன்னும் ஏற்பட்டு வருகின்றன.



ஸ்ரீ குர்ஜார்
(பெங்களூர் கிர்லோஸ்கர் கம்பெனி)

மின்சார சக்தி உற்பத்தியானால் மட்டும் போதுமா? உற்பத்தியாகும் சக்தியைத் தூர தூரமான இடங்களுக்குக் கொண்டு போகக் கம்பிகள் வேண்டாமா? உபயோகிப்பதற்கு ஸ்விட்சுகள், பல்புகள் முதலிய எத்தனையோ சாமான்களும் வேண்டு மல்லவா? இவற்றையெல்லாம் வெளிநாடுகளிலிருந்தே தருவித்துக் கொண்டிருந்தோமானால் கோடானு கோடி ரூபாய் தேசத்துக்கு நஷ்டமாகிக் கொண்டிருக்கும். இந்தியாவிலேயே மின்சார சாமான்களை உற்பத்தி செய்கிறவர்களும் அச் சாமான்களை விநியோகிப்பவர்களும் உபயோகிப்பவர்களும் மேற்கூறியவாறு தேசிய நஷ்டம் நேராமல் தடுப்பவர்களாகிறார்கள்.



ஸ்ரீ ஸி. எம். ஷா
(கல்கத்தா ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி)

சங்கத்தின் தலைவர் ஸ்ரீ சீதாபதி இதையெல்லாம் தமது முன்னுரையில் நன்கு எடுத்துச் சொன்னார். "மின்சார சாமான்களை இங்கேயே உற்பத்தி செய்கிறோம்; மேலும் மேலும் அதிகமாக உற்பத்தி செய்கிறோம்; வெளி நாட்டுச் சாமான்களுக்குத் தரத்தில் சிறிதும் குறையாதபடி உற்பத்தி செய்கிறோம்" என்று வற்புறுத்திக் கூறினார்.

மேற்படி மகாநாட்டிற்கு முக்கிய விருந்தினராக அழைக்கப் பட்டிருந்த ஸ்ரீ எம். பக்தவத்சலம் மின்சார உற்பத்தித் துறையில் செய்திருக்கும் அரிய தொண்டுகளைப்பற்றி ஸ்ரீ சீதாபதி பெரிதும் பாராட்டினார்.

ஸ்ரீ பக்தவத்ஸலம் தகுந்தவாறு பதில் கூறினார். "நீங்கள் உற்பத்தி செய்யும் சாமான்களின் தரத்தை மேலும் மேலும் அபிவிருத்தி செய்வதில் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும்" என்று வற்புறுத்தினார்.

பிறகு கல்கத்தாவைச் சேர்ந்த மிஸ்டர் C. M. ஷாவும் பெங்களூரைச் சேர்ந்த ஸ்ரீ N. W. குர்ஜார் என்பவரும் வந்தனோபசாரம் கூறினார்கள்.

இவ்விதம் மின்சார உற்பத்தியாளர் மகாநாடு இனிது நிறைவேறியது.

இனிமேல் நம்முடைய இருப்பிடங்களில் ஒரு மின்சார பல்பு வீணாகி விட்டால், அல்லது ஸ்விட்ச் கெட்டுப் போய் விட்டால், என்ன செய்வது என்பதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அதற்காக யாரையும் நொந்து கொள்ளவோ, திட்டவோ வேண்டிய அவசியமும் இல்லை. ஸ்ரீ டி. எஸ். சீதாபதி அவர்களின் பிரசங்கத்தில் ஒரு பிரதியை எடுத்து வைத்திருக்கிறேன். கெட்டுப்போன ஸ்விட்ச் அல்லது பல்பினிடம் போய் அந்தப் பிரசங்கத்தை ஒரு தடவை படித்துக் காட்டினால், அது சுதறிக் கொண்டு தானே 'ரிப்பேர்' ஆகி விடாதா? பார்க்கலாம்!




## 29

நினை போகத்தைத் தேடிக் கெட்டுப் போவதைச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு அடுத்தபடியாகப் பண ஆசையைப் பற்றிச் சங்கரர் சொல்லுகிறார். இந்த விஷயத்தைப் பற்றி முதனிலேயே வந்த இரண்டாவது பாட்டை நினைவில் வைத்துக் கொண்டு இந்த 29-வது பாட்டைப் படிக்க வேண்டும். அந்தப் பாட்டில் சொன்னது: "சொந்தத்தில் பாடுபட்டு உண்டாக்கிய பொருளைக் கொண்டு வாழ்க்கை நடத்து; சுகம் பெறுவாய். இன்னும் பணம், இன்னும் பணம் என்கிற ஆசையை நீக்கிக்கொள். அதனால் சுகமடைய மாட்டாய். அது ஒரு தீராத தாகம்" என்றார்.

**மூட ஜஹீஹி தனாகம த்ருஷ்ணாம்**
**குருஸத்புத்திம் மனஸி வித்ருஷ்ணாம்**
**யல் லபஸே நிஜகர்மோபாத்தம்**
**வித்தம் தேன வினோதய சித்தம்**

பண ஆசையைப் பற்றி இப்போது கடைசியாக மறுபடியும் சங்கரர் சொல்லுகிறார்:

**அர்த்தம் என்பது அனர்த்தமே காண்**
**வியர்த்தம் பணம் பணமென்றலைவது**
**எள்ளளவும் சுகமில்லை பணம் சேர்த்த பாவிக்கு**
**கள்ளனை மட்டுமல்ல பெற்ற மகனையு மஞ்சுவான்**
**சந்தேகமில்லை இது உண்மை யறிவாய்**
**எந்த ஊரிலுமிதுவே பணத்தின் கதி.**

* * *

**அர்த்த மனர்த்தம் பாவய நித்யம்**
**நாஸ்தி ததஸ் ஸுகலேசஸ் ஸத்யம்**
**புத்ராத் அபி தனபாஜாம் பீதி:**
**ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி:**

---

अर्थमनर्थं भावय नित्यम्
नास्ति ततः सुखलेशः सत्यम् ।
पुत्रादपि धनभाजाम् भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥

ஏதிலாவது சுகம் பெறலாம். பணம் சேர்ப்பதில் ஆசை செலுத்திச் சுகம் அடைய மாட்டோம். வாழ்க்கைக்கு வேண்டியதற்காகச் சொந்தமாகப் பாடுபட்டுச் சம்பாதித்துப் பெறுவதற்கு ஆட்சேபணையில்லை. ஆனால் பணம் சேர்ப்பதிலேயே ஒரு தனி ஆசை உண்டாக்கிக் கொண்டு அதற்காக அலைவதை சங்கரர் வேண்டாமென்கிறார்; அதைப் பற்றியும் லவுகிக நியாயமே சொல்லுகிறார். சேரச் சேர ஆசை பெருகிக் கொண்டே போகும். அதனால் துயரமே யொழியச் சந்தோஷம் கிடையாது. அதுவே யன்றிச் சேர்த்து வைக்கும் சொத்தைப் பற்றி அதன் கூடவே கவலையும் வளர்ந்து கொண்டு போகும். திருடனையும் மோசக்காரர்களையும் அஞ்சுவது மட்டுமல்ல; பெற்ற மகனுங்கூடப் பணம் சேர்த்த பாவிக்கு பயத்துக்குக் காரணமான பகையாகி விடுகிறான்.

மகன் என்றால் உதாரணமாகச் சொன்னது. நெருங்கிய பந்துக்கள் அனைவரும் பயத்துக்குக் காரணமாகி விடுகிறார்கள். இயற்கை அன்பு சேதப்பட்டுப் போகிறது. எந்த தேசத்திலும் இதுவே நடைபெறுகிறது. இத்தகைய ஒரு விஷத்தை ஏன் தேடியலைவது? விட்டுத் தள்ளுங்கள் என்கிறார்.

**"தேயம் தீன ஜனாய ச வித்தம்"**

என்று 27-வது பாட்டில் சொன்னார். பணம் இருந்தால் அதை ஏழைகளுக்குக் கொடுத்து அந்த விதத்தில் மகிழ்ச்சி அடை. பணத்தைப் பிறருக்குக் கொடுப்பதில்தான் பெரு மகிழ்ச்சி இருக்கிறது. பணத்தைக் கெட்டியாகக் கட்டிக் கொண்டு, லோப குணத்தைப் பெருக்கிக் கொண்டு, துக்கத்தையும் கவலையையும்

பகையையும் பெருக்கிக் கொள்ளாதே என்று கூறுகிறார்.

அர்த்த சாஸ்திரத்தை நன்றாகப் பயின்றவர்கள் லோப குணத்தை விலக்குவார்கள். பணம் என்பது ஒரு சாதனப் பொருள். அதுவே ஒரு சுகமன்று, முடிவுமன்று. வரம்புக்கு மேல் மிஞ்சினபின் அது ஒரு பாரமும் கவலையுமேதான்.

நாம் கோருவது சுகம். இதை மறந்துவிட்டுக் காகிதத்தில் எழுதிய பணத்தின் கணக்கே சுகம் என்று கற்பனை செய்துகொண்டு அதற்கு அடிமையாய்ப் போகிறோம். முன் காலத்திலாவது பணம் என்பது தங்கம் வெள்ளியாக இருந்தது. கை நிறைய எடுத்து அள்ளும் பான்மையாக இருந்தது. அள்ளியும் எண்ணியும், மடையர்கள் இன்பம் அடையலாம். இக்காலத்தில் அப்படி அள்ளி எண்ணி ஆனந்தப்படுவதற்குக்கூட இடம் இல்லை. உன் பணம் வெறும் காகிதம்—அதுவுமில்லை, பாங்கியில் வேறொருவர் அனுபவித்து வரும் பொருளின் கணக்கு மட்டுமே நீ பார்த்துத் திருப்தி அடைவது. முடிவில் இரண்டு மூங்கில் கட்டைமேல் படுத்து மறையப் போகிறாய். கூடப் பணம் வராது. கணக்குகளைப் பற்றி உன் மக்கள் ஒருவரோடு ஒருவர் சண்டை இடுவதை நீ காண மாட்டாய். ஆனால் சண்டை இடுவது நிச்சயம். இதையெல்லாம் அடக்கிச் சுருக்கமாக சங்கரர் "அர்த்தம் அனர்த்தம்" என்றார்.

இதுவெல்லாம் பழைய கதை என்பீர்கள். யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். ஆனால் ஒப்புக் கொள்ளாத காரணத்தினால் கண்ட உண்மையானது பொய்யாகாது. சங்கரர் சொல்லுவது பொய்யல்ல. அர்த்தம் என்பது அனர்த்தம். இதைத் தினமும் சிந்தனை செய்வோம். பணத்தைச் சேர்ப்பதில் சுகம் இல்லை கவலைதான். அதை ஏழைக்குத் தந்து சுகம் அடைவோம். அதுவே உபநிஷத் வாக்கியமும்.

பணத்தை என்னத்துக்காகச் சேர்த்து வைக்கிறாய்? மகன் ஒன்றும் அறியாத அப்பாவி, அல்லது மகன் அநாதை, அவனுக்கு ஆதரவாக இருக்கும் எனக்குப் பின் என்று எண்ணலாம். உலகத்தின் போக்கு அறியாதவர்கள் இவ்வாறு சமாதானம் சொல்லுவார்கள். பணம் பெற்ற அநாதையர்களை விசாரித்தால் தெரிய வரும் இந்தச் சமாதானத்தில் எவ்வளவு உண்மையிருக்கிறதென்பது. சொத்து அடைந்த அப்பாவியை எவ்வளவு மோசக்காரர்கள் உடனே சூழ்ந்துகொண்டு பணத்தையும் ஆளையும் பாழ்படுத்துகிறார்கள் என்பது விசாரித்தால் தெரியும். பணம் சேர்த்து வைத்து மறைந்து போவதால் எல்லாம் சாதித்துவிட்டதாக எண்ணுவது மோகம். அனுபவத்துக்கு விரோதம்.

பொருளைத் தேடவேண்டாம் என்று அல்ல ஆச்சாரியர் சொன்ன உபதேசம். அதனால் எல்லாம் சாதித்து விடலாம் என்று மோகம் கொள்ளாதே—அதற்காக உயிரைப் பாழ்படுத்திக் கொள்ளாதே—பற்று வளர்த்துக் கொள்ளாமல் செய்ய வேண்டியதைச் செய்—லோபியாகப் போகாதே—என்பது பாட்டின் பொருள். லோபியானவன் பணத்துக்கு அடிமையாவான். லோபித்தனம் கொள்ளாமல் நல்வழியில் சம்பாதித்து நல்ல முறையில் செலவு செய்து இல்லறம் நடத்துவதை சங்கரர் ஆட்சேபிக்கவில்லை. இதற்கு அத்தாட்சி 27, 29வது பாட்டுக்களில் சொன்ன விஷயங்கள்.





வருகிறது!
R. பத்மனாபன்
அளிக்கும்
குமாரி
தமிழ்








MUHIL




ரொம்ப ரொம்பப் பழைய காலத்திலே ஒரு ராஜா இருந்தார். அந்த ராஜாவுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தார்கள். மூன்று பேரும் ஒவ்வொரு விதத்தில் ராஜாவுக்கு ரொம்பவும் பிரியமானவர்கள்.

முதல் இளவரசனுடைய பெயர் சமர சிம்மன் என்பது. அவன் பெரிய பெரிய யுத்தங்களுக்குப் போய்ப் பெயரும் புகழும் சம்பாதிக்கவில்லை என்றாலும் எப்பொழுதும் அவன் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களுடன் போராடிக் கொண்டேயிருப்பான். நெய்க்குத் தொன்னை ஆதாரமா தொன்னைக்கு நெய் ஆதாரமா என்று சிந்திக்கத் தொடங்கினால் அவனுக்கு நேரம் போவதே தெரியாது! நாள் போவதும் தெரியாது!

அடுத்தவன் பெயர் விஜய சிம்மன். இவன் புத்திசாலி. இவனுக்குத் தெரியாத விஷயமே கிடையாது. எந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டாலும் "ஓ, அதுவா! எனக்கு முன்னமேயே தெரியுமே" என்று கூறி எல்லாருக்கும் சாங்கோபாங்கமாக விளக்குவான்.

மூன்றாவது இளவரசனுடைய பெயர் அமர சிம்மன். இவன் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருப்பான். எல்லாரிடமும் மிகவும் அன்புடன் பழகுவான். ஊரிலுள்ளவர்கள் அத்தனை பேருக்கும் அமரசிம்மன் என்றால் ஒரே உயிர்.

இந்த மூன்று இளவரசர்களும் தக்க பருவமடைந்தனர். ராஜாவுக்கும் முதுமைப் பருவம் வந்து விட்டது. ராஜ்ய பாரத்தைத் தம் புதல்வர்களில் யாரிடமாவது ஒப்படைத்து விட்டு ஓய்வு பெற வேண்டும் என்று நினைத்தார். ஆனால் இந்த ராஜ்ய பாரத்தை யாரிடம் ஒப்படைப்பது என்பது தெரியாமல் தவித்தார். ஆம். அவருக்குத்தான் தம் புதல்வன் ஒவ்வொருவனிடமும் நல்ல அபிப்பிராயம் இருக்கிறதே! யாருக்குக் கொடுத்து யாருக்குக் கொடுக்காமலிருப்பார்?

வேறொரு ராஜாவாக இருந்தால், இந்த மாதிரியான தர்மசங்கடமான நிலை ஏற்பட்டால் என்ன செய்வார்கள் தெரியுமா? தங்கள் புதல்வர்களைக் கூப்பிட்டு ஏழு சமுத்திரங்களைக் கடந்தால் ஏழு மலைகள் வரும்; அந்த ஏழு மலைகளைக் கடந்தால் ஒரு பிரமாண்டமான கிணறு தெரியும். அந்தப் பாழுங்கிணற்றை ஒரு மாபெரும் பூதம் காவல் காக்கும். அந்த பூதத்தை வென்று பாழுங்கிணற்றில் இறங்கினால் ஒரு பெரிய மலைப்பாம்பு தென்படும். அந்த மலைப்பாம்பைக் கொன்று உள்ளே இறங்கினால் ஒரு படி வரிசை தெரியும். அந்தப் படிகளில் இறங்கி அந்தச் சுரங்கப் பாதை வழியாகப் போனால் ஒரு அரண்மனை தெரியும். அந்த அரண்மனையில் ஒரு அழகிய மங்கை கையில் அழகிய மலர் மாலை ஒன்றை ஏந்திக் கொண்டிருப்பாள். யார் முதலில் நுழைகிறார்களோ அவர்கள் கழுத்தில் அந்த மங்கை மாலையிடுவாள். இப்படி மாலையிட்ட மங்கையுடன் எந்த இளவரசன் ஊர் திரும்புகிறானோ அவனுக்குப் பட்டம் என்று சொல்லுவார். இந்த முயற்சியில் அந்த ராஜாவின் மூன்று புதல்வர்கள் ஈடு பட்டால், இரண்டு புதல்வர்கள் மாண்டு போவார்கள். ஒருவன் எப்படியும் கடைசியில் ஜயத்துடன் திரும்புவான். அவனுக்கு ராஜா பட்டம் கட்டி விடுவார். ராஜாவின் தொல்லையும் தீர்ந்து போகும்.

ஆனால் நம் கதையில் வரும் ராஜாவுக்கு அப்படியெல்லாம் தம் புதல்வர்களைச் சோதிக்க விருப்பமில்லை. ஆகவே என்ன செய்வது என்ற கவலையில் ஆழ்ந்தார்.

இப்படி ராஜா கவலையில் ஆழ்ந்திருந்த போது ஒரு வன தேவதை ராஜாவின் முன்னால் வந்து குதித்தது.

"மகாராஜா, உங்கள் கவலை என்னவென்று அறிந்தேன். உங்கள் புதல்வர்களில் யாருக்குப் பட்டம் கட்டுவது என்பதை நான் ஒரு பரீட்சை நடத்திச் சொல்லுகிறேன்" என்றது.

இதைக் கேட்டதும் ராஜா மிகுந்த சந்தோஷமடைந்தார். அந்தச் சந்தோஷத்திலேயே "வன தேவதையே! என் கடைசி மகன் அமரசிம்மன் என்றால் எனக்குப் பிரியம்

அதிகம்... அதனாலே ...... என்ன புரிந்ததா?" என்றார். ஆம், ராஜாவுக்குப் பட்டம் அமரசிம்மனுக்குக் கட்டிவிட வேண்டும் என்ற ஆசை யிருந்தது.

"சரி, சரி, நன்றாகப் புரிந்து விட்டது! அமரசிம்மனையே என் பரீட்சைகளில் தேறும்படி செய்து உங்களுக்குச் சிபாரிசு செய்கிறேன்" என்று கூறி விட்டுச் சென்றது.



வன தேவதை ஒரு கணம் யோசித்தது—எப்படி இந்த மூன்று ராஜகுமாரர்களையும் பரிசோதனை புரிவது என்று. அப்படி யோசித்த போது யார் மிகுந்த இரக்கமுள்ள ராஜகுமாரனாகத் தோற்றுகிறானோ அவன்தான் பட்டத்துக்கு உரியவன் என்று தீர்மானிக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தது!

ஆகவே அவர்களுடைய அன்பையும் இரக்கத்தையும் பரிசோதிக்க ஒரு கிழப் பிச்சைக்காரியின் வேஷம் எடுத்துக் கொண்டது வனதேவதை!

தள்ளாடித் தள்ளாடித் தெரு வழியாக நடந்து சென்றாள் கிழவி. எதிரில் மூத்த ராஜகுமாரனாகிய சமரசிம்மன் வந்தான். அவனைப் பார்த்ததும் "ஐயா, பசிக்குது; ஏதாகிலும் தர்மம் பண்ணுங்கள்" என்று கெஞ்சினாள்.

உடனே சமரசிம்மன் "கிழவி! பிச்சை எடுப்பது தவறு! யாரும் உழைத்துத்தான் உயிர்வாழ முயல வேண்டும்! உழைப்புத்தான் மனிதனை உயர்த்தும். உனக்குப் பிச்சை யிட்டால் உன் சோம்பல்தான் வளரும்! அதனால்தான் உனக்குப் பிச்சை யிடவில்லை. பிச்சையிட்டுச் செய்யும் உபகாரத்தை விடப் பிச்சை போடாமலிருப்பதே நான் உனக்குச் செய்யும் பேருபகாரமாகும். என்ன, நான் சொல்வது உனக்கு விளங்கிற்றா?" என்று கேட்டான்.

வன தேவதைக்கு ஒன்றும் புரியவில்லை. வன தேவதையின் இத்தனை நாள் வாழ்க்கையில் காணாத புது விதமாக அல்லவோ, இந்த மனுஷன் விரட்டுகிறான்! அதனால் இந்த ராஜகுமாரன் அன்பு மேலீட்டினால்தான் இப்படிச் சொல்லுகிறானா அல்லது வேறு காரணத்தினால் இப்படிச் சொல்லுகிறானா என்பது தெரியாமல் தவித்தது!

கொஞ்ச நாழிகைக் கெல்லாம் விஜய சிம்மன் அந்த வழியே வந்தான். அவனிடமும் கிழவி பிச்சை கேட்டாள். ஆனால் அவன் தான் புத்திசாலியாயிற்றே! அவன் என்ன சொன்னான் தெரியுமா?

"கிழவி! உண்மையில் நீ ஒரு பிச்சைக்காரக் கிழவியல்ல என்பது எனக்குத் தெரியும்! நான் எத்தனையோ கதைகளில், படித்திருக்கிறேன், வன தேவதைகள் பிச்சைக்கார வேஷத்தில் வந்து ராஜகுமாரர்களிடம் பிச்சை கேட்கும் என்றும், அந்த ராஜ குமாரர்களும் நிஜமான பிச்சைக்காரிதான் என்று நினைத்து ஏமாந்து போவார்கள் என்றும். ஓ, வனதேவதையே! நான் அப்படிப்பட்ட ஏமாந்த ராஜகுமாரன் அல்ல என்பது நினைவிருக்கட்டும்! போ! போ! என் அப்பாவிடம் போய் விஜயசிம்மன்தான் கெட்டிக்காரன்; அவனுக்குத்தான் பட்டம் கட்டவேண்டும் என்று போய்ச் சொல்!" என்று கூறிவிட்டு மேலே சென்றான்.

கிழவி உருவத்திலிருந்த வனதேவதை விஜயசிம்மனின் புத்தி கூர்மையைக் கண்டு பெருவியப்புற்றது.

இப்படி வியந்து கொண்டிருக்கும் போதே மூன்றாவது ராஜகுமாரனாகிய அமரசிம்மன் அங்கே வந்தான். அவனிடமும் கிழவி இறைஞ்சினாள். நல்ல வேளையாக அமரசிம்மன் தன் கையில் ஒரு சீப்பு வாழைப் பழம் வைத்திருந்தான். கிழவி கேட்டதும் அவ்வளவையும் கொடுத்து விட்டான்.

அமரசிம்மனின் அன்பைக் கண்டு வன தேவதை வியப்புற்றாலும், தனக்கு மிஞ்சி தானே தர்மம் செய்ய வேண்டும் என்று நினைத்தது. 'நாளைக்கு இவன் பட்டத்துக்கு வந்தானானால் யாராகிலும் ராஜ்யத்தையே கேட்டால் கொடுத்துவிடுவான் போலிருக்கிறதே! இந்தக் குணம் ராஜகுமாரனுக்குத் தகுந்ததல்லவே! எனினும் இன்னொரு பரீட்சை செய்வோம்' என்று தீர்மானித்தது.

*

**வ**னதேவதை இந்தத் தடவை புறா உருவம் எடுத்துக் கொண்டது. வானத்தில் ஒரு கௌதாரி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அது திடீர் என்று இந்தப் புறாவைக் கண்டதும் துரத்தத் தொடங்கியது. இதைப் பார்த்ததும் புறா உருவிலிருந்த வனதேவதை, 'இந்த ராஜ குமாரர்களின் இரக்கத்தைப் பரிசோதிப்பதற்கு நல்ல ஏதுவாயிற்று' என்று சொல்லிப் பறந்தது.

புறா பறந்து பறந்து முதல் ராஜகுமாரனை சமரசிம்மன் முன் போய் வட்ட மிட்டது. அதைத் துரத்திக் கொண்டு கௌதாரியும் பறந்தது. இதைப் பார்த்ததும் சிந்தனையாளனான சமரசிம்மன் இப்படி நினைத்தான்.

'புறாவைப் பார்க்கும்போது பரிதாபமாகத்தான் இருக்கிறது. அதை எப்படியும் கௌதாரியிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என்கிற எண்ணம் எழுகிறது. ஆனால் கௌதாரியிடமிருந்து புறாவைக் காப்பாற்றி விட்டால்

கௌதாரிக்குத் துரோகம் செய்தவனாவேன். அதன் ஆகாரத்தை அபகரித்தவனாவேன்! மேலும் புறாவைக் காப்பாற்றுவதால், அது தின்னும் புழு பூச்சியாகிய சின்னஞ்சிறு உயிர்களுக்கெல்லாம் துரோகம் செய்தவனாகிறேன். ஆகவே, நான் புறாவிடம் அம்பு செலுத்துவது தகாது' என்று பலபடியாக எண்ணிக் கொண்டே தன் வழியே மேலே சென்று விட்டான் சமரசிம்மன்.

அடுத்தாற்போல் விஜய சிம்மன் எதிரில் வந்தான். அவன்தான் மிகுந்த புத்திசாலி ஆயிற்றே! அவன் புறாவைப் பார்த்து, "ஏ, வனதேவதை! இன்னுமா சோதிக்கிறாய்? என்னிடம் உன் ஏமாற்றுவித்தையெல்லாம் பலிக்காது! உன்னை அந்தக் கௌதாரி ஒன்றும் பண்ணிவிட முடியாது என்பது எனக்குத் தெரியும்! ஆகவே, வீணாக இங்கே காலம் தாழ்த்தாமல் என் தந்தையிடம் போய் விஷயத்தைத் தெரிவி" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

அடுத்தாற் போல் அமரசிம்மன் வந்தான். புறாவைக் கௌதாரி துரத்தி அடிப்பதைப் பார்த்தவுடனே அவன் உள்ளத்தில் இரக்கம் பீறிட்டுக் கொண்டு வர ஆரம்பித்து விட்டது. 'அந்த பலவீனம் பொருந்திய புறாவைக் கௌதாரி துரத்துவதாவது? நான் இந்தக் கௌதாரியைச் சும்மா விட்டேனா? இப்பொழுதே அதைத் தீர்த்துவிடுகிறேன்' என்று எண்ணிக் கொண்டு தன் தோள் பட்டையிலிருந்து வில்லை எடுத்தான். கௌதாரியின் மீது குறி வைத்தான். அம்பை எய்தான்!

அந்தோ, பரிதாபம்! எய்த அம்பு குறி தவறி நேரே புறாவின் மீது விழுந்தது!

உடனே புறா தன் வேஷத்தைக் களைந்து விட்டு நிஜ உருவத்தைப் பெற்று வான வீதியில் பறந்து சென்றது!

அதைப் பார்த்து அமரசிம்மன் அப்படியே பிரமை பிடித்து நின்றான்.

வானத்தில் பறந்த வனதேவதை நேரே அரசனிடம் சென்றது. "மகாராஜா! உங்கள் மூன்று பிள்ளைகளையும் பரிசோதித்தேன். அதில் உங்கள் முதல் பிள்ளை யோசித்து யோசித்து மூளையைக் குழப்பிக் கொள்ளும் தன்மையுடையவன். ஆகவே அவன் ராஜ்ய பாரம் ஏற்கத் தகுந்தவனாகத் தோன்றவில்லை. உங்கள் கடைசிப் பிள்ளை நல்ல அன்புடையவனாக இருந்த போதிலும், அந்த அன்பின் காரணமாகச் செய்யும் காரியங்கள் தவறாகப் போகின்றன. ஆகவே அவனும் அரச பதவிக்கு அருகதையற்றவன். உங்கள் நடுப் பிள்ளை விஜயசிம்மன்தான் எதையும் பார்த்த மாத்திரத்தில் கிரகித்து நடந்து கொள்ளும் தன்மையுடையுவன். அவன்தான் பட்டத்துக்குரியவன் என்று கருதுகிறேன்" என்றது.

ராஜாவுக்கு அமரசிம்மனுக்குப் பட்டம் கட்ட முடியவில்லையே என்று வருத்தமாக இருந்தது. என்றாலும், "உன் அபிப்பிராயப்படியே நானும் நடந்து கொள்கிறேன்" என்று சொன்னார் வனதேவதையைப் பார்த்து.

பிறகு விஜய சிம்மனுக்கு ஏக அமர்க்களமாகப் பட்டாபிஷேகம் நடந்தது.

# சுமங்கலிப் பிரார்த்தனை

கே. ஆர். கௌஸல்யா

"ஆமாம், நாள் நெருங்கிக்கொண்டே இருக்கிறதே! நீங்கள் இன்னும் வெறுமனே இருக்கிறீர்களே?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள் பாகீரதி.

"கல்யாணத்துக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தயார் பண்ணியாகி விட்டது. பத்திரிகையும் எல்லோருக்கும் அனுப்பியாயிற்று. இன்னும் என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?" என்று கையிலிருந்த தினப் பத்திரிகையை மேஜை மீது வைத்துக்கொண்டே கேட்டார் சுந்தரமய்யர்.

"அதெல்லாம் சரிதான்; நம்ம லலிதாவை வரச் சொல்லி இன்னும் கடிதம் போடவில்லையே! அவள் வந்து சுமங்கலிப் பிரார்த்தனை செய்தப்புறம்தானே மற்றதையெல்லாம் கவனிக்கணும்? அவள் இருக்கிறதோ தூர தேசம். இப்பொழுதே கடிதாசு போட்டால்தானே சீக்கிரமாக அவள் வந்து, கல்யாணத்துக்கு முந்தி எல்லாம் நடக்கும்...?"

இவ்வார்த்தைகளைக் கேட்ட சுந்தரமய்யரின் முகத்தில் ஒரு மாறுதல் தோன்றியது.

"நம்ம ஜயராமன் கல்யாணத்தின்போது கல்யாணிக்குத்தானே 'மங்கலிப் பெண்டு' செய்தோம்? இப்ப மாத்திரம் ஏன் அதை மாற்றி லலிதாவை வரவழைக்க வேணும் என்கிறாய்?" என்றார்.

"எல்லாம் தெரிந்த நீங்களே இப்படிக் கேட்டால் அப்புறம் நான் என்னத்தைச் சொல்லுவது? ஜயராமனது கல்யாணத்தின்போது கல்யாணியும் அவள் அகமுடையானும் வந்திருந்தார்கள். இப்ப 'அவர்' இருக்கிற இடம் தெரியவில்லை. நாலு வருஷம் ஆயிற்று. இரண்டுங்கெட்டான் நிலைமையிலிருக்கும் கல்யாணிக்கு எப்படிச் சுமங்கலிப் பிரார்த்தனை செய்வது? நாம் வேண்டுமானால் நம்முடைய குழந்தையாயிற்றே என்று செய்துவிடலாம். அந்தக் கல்யாணமாகிற தம்பதிகளுக்குத் தலையைக் காலை வலித்தால் நாளைக்கு அது நம்மைத்தானே பாதிக்கும்? அப்புறம் நாலு பேர் நம்மைத்தானே இடித்துக் காட்டுவார்கள்?" என்று கண்களில் பொங்கி வரும் கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டே சொன்னாள் பாகீரதி.

ஒரு கணம் யோசித்தார் அவர். அவள் சொல்வதில் நியாயம் இருப்பதாகவே அவருக்குத் தோன்றியது.

"ஆனால் இது நம் கல்யாணிக்குத் தெரிந்தால் அவள் மனசு என்ன பாடு படும்! அவளுக்கு நாம் என்ன சமாதானம் சொல்லுவது? ஏற்கெனவே அவள் மனசு ரொம்ப நொந்து போயிருக்கிறாள், பாவம்!"

"அதற்கு நாமென்ன செய்யலாம்? எல்லாம் அவள் தலைவிதி. இல்லாவிட்டால் நன்றாக நல்ல உத்தியோகத்திலிருந்த மாப்பிள்ளைக்குத் திடீரென்று யுத்த சேவைக்கு மாற்றலாவானேன்! போனால்தான் என்ன? எல்லோரையும் போலச் சீக்கிரம் திரும்பி விடக் கூடாதா? அல்லது இருக்குமிடத்தைப் பற்றித் தகவலாவது தெரிவிக்கக் கூடாதா?"

"எனக்கென்னவோ, நீ கல்யாணியினுடைய கல்யாணத்தின்போது அந்தப் பெண்ணை ஒரு வார்த்தை சொன்னாயே! அந்தப் பலன்தான் நம்ம பொண்ணுக்கு இந்தக் கதி வந்து வாய்த்ததோ என்று தோன்றுகிறது!"

"போதுமே! வீணாக அதையெல்லாம் சொல்லி என் மனசைக் கஷ்டப் படுத்தாதீர்கள். அப்போ என்னவோ புத்தியில்லாமல் பின்னாலே நடக்கப் போறதைப்பற்றிச் சிந்திக்காமே, சொல்லிப்பிட்டேன். பழைய சமாசாரங்களைச் சொல்லி ஏன் இப்பொழுது புண்ணிலே கோலிடுகிறீர்கள்? நம்ம லலிதாவை வரச் சொல்லி, சீக்கிரம் கடிதாசு எழுதுங்கள்" என்று சொல்லி விட்டு அவள் சமையலறைக்குச் சென்றாள்.

தன்னுடைய பெற்றோரின் சம்பாஷணையைப் பக்கத்து அறையிலிருந்து ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்த கல்யாணியின் மனம் அளவற்ற சங்கடத்தில் ஆழ்ந்தது. தன் பெற்றோரே தன்னைச் சுபகாரியங்களில் ஒதுக்கும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டதை நினைத்தபோது அவளுடைய இருதயம் சுக்கல் நூறாக வெடித்து விடும்போலிருந்தது. கண்கள் மாலை மாலையாகக் கண்



"ஞாபக மறதிக்காக எனக்கு வைத்தியம் செய்தீர்களே, ஞாபகம் இருக்கா?"
"ஆமாம்."
"ஞாபக மறதியாக இரண்டு தடவை உமக்கு 'பீஸ்' கொடுத்து விட்டேன். திருப்பிக் கொடுத்து விடுகிறீர்களா?"
"நீங்கள் ஞாபக மறதியாகச் சொல்லுகிறீர்கள். இன்னும் எனக்கு நீங்கள் 'பீஸே' கொடுக்கவில்லை!"

ணீரைச் சிந்தின. மனம் கடந்துபோன சம்பவங்களின் ஏடுகளைப் புரட்ட ஆரம்பித்தது.

சுந்தரமய்யரின் மூத்த பெண்ணாகப் பிறந்தவள் கல்யாணி; இரண்டாவது பெண் லலிதா; மூன்றாவது பெண் கீதா. அவருடைய ஒரே பிள்ளை ஜயராமன். சுந்தரமய்யர் அகௌண்டண்ட் ஜெனரலாபீஸில் 500 ரூ. சம்பளத்தில் வேலையிலிருந்தார். நல்ல உத்தியோகத்திலிருந்த ராமமூர்த்தியைத்தான் கல்யாணிக்கு மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்தார் அவர். ராமமூர்த்திக்கு இரண்டு சகோதரிகள். மூத்தவள் ஜானகி. இளையவள் ஸரஸ்வதி. ஜானகிக்குக் கல்யாணமாயிற்று. அவளைக் கணவன் வீட்டில் கொண்டுவிட நாள் பார்த்திருக்கையில் அவள் கணவன் ரகுபதி திடீரென்று ஏதோ குடும்பத்தில் சேர்ந்த பணத்தகராறு காரணமாக மனஸ்தாபப் பட்டுக் கொண்டு தகப்பனாருடன் சொல்லிக் கொள்ளாமல் எங்கோ சென்று விட்டான். இதனால் கல்யாணமாகி எட்டு வருஷங்களாகியும் ஜானகி வாழ்வை இழந்து பிறந்தகத்திலேயே இருந்து வந்தாள்.

கல்யாணியின் கல்யாணத்தின்போது நாத்தனார் திருமங்கல்யம் முடியும் சமயம் வந்தது. கூட்டத்தை விலக்கிக்கொண்டு ஜானகி கல்யாணி அருகே வந்தாள். ஆனால் கல்யாணியின் தாயார் சாரதா, ''வாழாவெட்டியாய் இருக்கும் ஜானகி அந்தக் காரியத்தைச் செய்யக்கூடாது'' என்று பலமாக ஆக்ஷேபித்தாள். ஜானகியின் தங்கை ஸரஸ்வதியே கடைசியில் அந்தக் காரியத்தைச் செய்து முடித்தாள்.

ஜானகிக்கு இந்தச் சம்பவம் பெருத்த மன வேதனையையும் அவமானத்தையும் அளித்தது. தாயின் உபதேசத்தை அணுவளவும் மறக்காமல் புக்ககம் வந்த பிறகு கல்யாணி ஜானகியை அலட்சியப்படுத்த ஆரம்பித்தாள். பெற்றோரை இழந்து தன் சகோதரனே கதி என்று நம்பி வந்த ஜானகி அவனுடைய அன்பு மொழியில் தன் மனத்துயரத்தையும், கல்யாணியின் சுடு சொற்களையும் ஒருவாறு சகித்து வந்தாள். கல்யாணியைப் பற்றித் தூஷணையாக ராமமூர்த்தியிடம் எதையும் சொல்ல விரும்பவில்லை அவள். கல்யாணியின் மனப்போக்கையும், அலக்ஷ்ய மனப்பான்மையையும் ஒன்றிரண்டு சமயங்களில் அறிய நேர்ந்த ராமமூர்த்தியின் மனம் கலங்கியது. இதன் நடுவில் கல்யாணி



கர்ப்பம் தரித்தாள். பிரசவத்திற்குப் பிறந்தகம் வந்தாள். கல்யாணி பிறந்தகம் சென்ற சில மாதங்களுக்கெல்லாம் திடீரென்று ராமமூர்த்திக்கு மிலிடெரியில் ஒரு உத்தியோகமாயிற்று. ஜானகிக்கு வேண்டிய பணத்தைப் பாங்கில் அவள் பேரில் கட்டிவிட்டு, அவன் உத்தியோகத்தை ஏற்றுக்கொண்டு வெளி ஊருக்குச் சென்றுவிட்டான். கல்யாணிக்கு ஒரு பிள்ளை பிறந்தது. குழந்தைக்கு மூன்று வயதாகியும் யுத்த சேவைக்குச் சென்ற ராமமூர்த்தியைப் பற்றிய எந்த விவரமும் கல்யாணிக்குத் தெரியவில்லை. வாழாவெட்டி என்று பலர் நிந்திக்கப் பிறந்தகத்திலேயே தங்கி விட்டாள்.

தன்னுடைய விவாகத்தின்போது தன் நாத்தனாரைத் தான் அலட்சியப் படுத்திய போது அவள் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்பதை இப்பொழுதுதான் சிறுகச் சிறுகச் சிந்திக்கத் தொடங்கியது அவள் மனம்.

❋

கல்யாணத்திற்கு இன்னும் ஒரு வாரம் இருந்தது. அன்று காலை மணி பத்து இருக்கும். கல்யாணி சாப்பிட்டு விட்டு ஹாலில் ஏதோ யோசித்தவாறே உட்கார்ந்திருந்தாள்.

''ஸார், போஸ்ட்!'' என்று ஒரு குரல் கேட்டது. ஓடிச் சென்று தபாலை வாங்கி வந்தாள் கல்யாணி. கடிதம் அவள் பெயருக்கே வந்திருந்தது. அதிலும் அது அவள் நாத்தனார் ஜானகியின் கையெழுத்தில் இருப்பதைக் கண்டவுடனே ஏதோ ஒரு ஆவல் தூண்ட அவள் அதைப் படித்தாள்:

அன்புள்ள கல்யாணிக்கு,

அங்கு நீயும் குழந்தையும் சௌக்கியம் என்று நினைக்கிறேன். கண் காணாமல் சென்றிருந்த என் கணவர் பணத்தோடும் நல்ல உத்தியோகத்தோடும் வந்திருக்கிறார். இங்கு அவருக்கு அதிக நாள் தங்க லீவு இல்லையாதலால் நாங்கள் சீக்கிரத்தில் புறப்பட்டுப் பம்பாய்க்குப் போயாக வேண்டும். அதற்குள் உன்னையும், உன் குழந்தையையும் ஒரு முறை பார்க்க அதிக ஆவலாயிருக்கிறேன். அதோடு உன் வீட்டை உன்னிடம் ஒப்படைத்து விட்டுப் போக வேண்டும். ஆகவே நீ உடனே புறப்பட்டு வா.

உன் அன்புள்ள,
ஜானகி.

கடிதத்தைப் படித்து முடித்த கல்யாணியின் முகத்தில் ஒருபுறம் ஆனந்தமும், மற்றொருபுறம் துக்கமும் சேர்ந்து வாட்டியது. நாத்தனாரைப் பார்த்து மன்னிப்புக் கேட்க வலிய சந்தர்ப்பம் ஏற்பட்டதைக் குறித்து அவள் மனம் சந்தோஷப்

பட்டாலும், தன்னைப் போன்ற நிலையில் இருந்த அவளுக்கு வாழ்வில் ஒளி ஏற்பட்டு விட்டது. தனக்குத்தான் இன்னும் விமோசனம் ஏற்பட வில்லை என்று அவன் மனம் ஏங்கியது.

"அக்கா! நான் செய்த தவறுக்கு என்னை மன்னிப்பீர்களா?" என்று சொல்லிக் கொண்டே வந்து தன்னை நமஸ்கரித்த கல்யாணியை ஆசையுடன் வரவேற்றாள் ஜானகி. அளவற்ற வாத்சல்யத்துடன் தன் ஆசை மருமானைத் தூக்கிக் கொண்டாள். அச்சமயம் எதிர் அறையில் இருந்து திடீரென்று "கல்யாணி!" என்ற குரல் கேட்டது.

திடுக்கிட்டுத் திரும்பினாள் கல்யாணி. அவள் கணவன் ராமமூர்த்தி கோபமே உருவமாக நின்று கொண்டிருந்தான் அங்கே.

"வாழாவெட்டி இருக்கும் வீட்டில் உனக்கு இடமில்லை. நீ பிறந்தகம் போகலாம். யாரைக் கேட்டுக்கொண்டு இப்போது நீ இங்கு வந்தாய்?" என்று ஆத்திரம் பொங்கக் கேட்டான்.

கல்யாணியின் கண்களில் நீர் ததும்பியது. பதில் பேச முடியாமல் தொண்டை யடைத்துக் கொண்டது.

அதற்கு மேலும் அந்த நிலைமையை நீடிக்க விரும்பவில்லை ஜானகி. "அண்ணா, வீணாக அவள் மனத்தைப் புண்படுத்தாதே ராமு. நான்தான் அவளைப் புறப்பட்டு வரும்படி கடிதம் எழுதினேன். அவளுக்குப் புத்தி கற்பிப்பதாக எவ்வளவு நாட்கள்தான் நீ திரும்பி வந்து விட்ட பிறகு அவளை அங்கு விட்டு வைப்பது? அத்துடன் அவளைப் போலவே ஆதியில் கஷ்டப்பட்ட எனக்குத் தற்போது அவள் மன நிலை எப்படியிருக்கும் என்று நன்றாய்த் தெரியும். இப்போது என் வாழ்வு மலர்ந்து விட்டது. நீங்களும் இனி ஒன்றுபட்டுச் சந்தோஷமாய் வாழ்க்கை நடத்துங்கள்" என்று கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கக் கூறினாள்.

அப்போதுதான் எல்லாம் விளங்கியது கல்யாணிக்கு. தன் கணவன் வேண்டுமென்றே திரும்பி வந்த பிறகும் தனக்குத் தண்டனையளிக்கும் நோக்கத்துடன் விஷயத்தைத் தெரிவிக்காம லிருந்திருக்கிறான். தன் நாத்தனார், தன்னுடைய வாழ்வில் ஒளி ஏற்பட்டுவிடவே, அதற்குள் தங்களிருவரையும் சேர்த்து வைக்க நினைத்து அண்ணாவுக்குத் தெரியாமல் கடிதம் எழுதித் தன்னை வரவழைத்திருக்கிறாள். ஆகா! ஜானகிதான் எப்படிப்பட்டவள்!

"அக்கா! நீங்கள்தான் என் குலதெய்வம்" என்று ஜானகியின் காலில் விழுந்து நமஸ்கரித்தாள் கல்யாணி. அதற்குள் வாசலில் டாக்ஸி வந்து விடவே பெருமிதத்துடன் சென்று கணவனுடன் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்தாள் ஜானகி.

வட்டமேஜை

# 'ட' பார்ட்டிகள் ஒழிக!

தங்கள் பத்திரிகையில் 'ட பார்ட்டிகள் ஒழிக' என்ற தலைப்புள்ள தலையங்கம் படித்து மிக மகிழ்ச்சி யடைந்தேன். இந்த தேசத்தில் பிறந்து வாழும் மக்களுக்கு உணவு இல்லை என்ற பேச்சு ஒழியும் வரை காங்கிரஸ் மந்திரிகள், எம். எல். ஏ. க்கள், தலைவர்கள் ஊழியர்கள் எல்லோருமே 'டின்னர்கள் ஒழிக' 'ட பார்ட்டிகள் ஒழிக' என கோஷிக்க வேண்டும். உண்ணும் உணவே கட்டுப்பாடாக இருக்கும்போது கொண்டாட்டங்கள் எதற்கு! உணவுத் திண்டாட்டம் ஒழிந்த பிறகல்லவா மக்களுடன் கொண்டாட்டங்களில் கலந்து நாமும் மகிழ்ச்சி அடைய வேண்டும்! மந்திரிகளும் எம். எல். ஏ. க்களும் உணவுப் பஞ்சம் ஒழியும் வரை வாரத்தில் ஒரு நாளாவது உண்ணா விரத மிருந்து இந் நாட்டு மக்களுக்கு விரைவில் உணவுப் பஞ்சத்தைத் தீர்த்துக்கொடுக்க வேண்டுமென சில நிமிஷங்களாவது கடவுளைப் பிரார்த்தனை செய்ய வேண்டும். மகாத்மா காந்தி யடிகளால் வெறுக்கப்பட்ட கண்ட்ரோலை எவ்வாறு ஒழிக்கலாம் என்பதைப் பற்றித் தினம் ஒரு நிமிஷமாகிலும் சிந்திக்க வேண்டும். ஒவ்வொரு எம். எல். ஏ. யும் தங்கள் தொகுதியில் எத்தனை கிராமங்கள் என்பதைத் தங்கள் டைரியில் குறித்துக் கொண்டு அத்தனை கிராமங்களிலும் கிராம காங்கிரஸ் கமிட்டிகள் இருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். இல்லையென்றால் ஒவ்வொரு கிராமமாகப் போய்க் கிராமந்தோறும் காங்கிரஸ் கமிட்டி அமைத்து, அத்தனை கிராமங்களிலும் நம் கொடி பறக்கச் செய்ய வேண்டும். ஒவ்வொரு கிராமத்துக்கும் போய்த் தாங்கள் சட்டசபையில் இதுவரை செய்த வேலைகளையும் இனி செய்யப் போகும் வேலைகளையும் சொல்ல வேண்டும். தாங்கள் ஒவ்வொரு மாதமும் இத்தனை கிராமத்துக்குப் போனேன், இத்தனை கூட்டங்களில் பேசினேன் என்பதை மாகாண ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் பத்திரிகைகளுக்கும் அறிவிக்க வேண்டும்.

இவ்வாறாக எப்பொழுதும் மக்களிடம் நாம் தொடர்பு வைத்துக் கொண்டே இருந்தால் நம் மக்கள் நம்மை விட்டு எங்கே போவார்கள்! நமக்கு வோட்டுப் போடாமல் யாருக்குப் போடுவார்கள்! தலைவர்கள், மந்திரிகள், ஊழியர்கள், எம். எல். ஏ. க்கள் எல்லோருமே மக்களிடம் எப்பொழுதும் தொடர்பு வைத்துக் கொள்வதோடு காந்தியடிகளைப் போல் பிரார்த்தனை மூலம் கடவுளிடமும் கொஞ்சம் தொடர்பு கொள்ள வேண்டும். அவ்வாறு நாம் செய்து வந்தால்தான் நம் மக்கள் சக்தியையும் நம் ஆத்ம சக்தியையும் யாராலும் வெல்ல முடியாத நிலை ஏற்படும். பிறகு நமக்குத் தோல்வியே கிடையாது. நாட்டு மக்கள் என்றும் சுபிட்சமாய் வாழ்வார்கள். நாம் உலகத்திற்கே வழி காட்டலாம்.

அருப்புக்கோட்டை
5—3—52

அ. பெ. நாராயணன்

# கடல் அருகில் பெரிய டாங்குகள்

பம்பாய், கல்கத்தா, மதராஸ், வாஸ்கோடகாமா, ஒக்ஹா துறைமுகம், விசாகப்பட்டினம், கொச்சி இவ்வூர்களில் கடலுக்கு அருகாமையில் உள்ள பெரிய டாங்குகளில் கடலுக்கு அப்பால் உள்ள பிரதேசங்களிலிருந்து கப்பல் மூலமாக இந்தியாவுக்குக் கொண்டுவரப்படும் பர்மா-ஷெல் எண்ணெய்கள் நிரப்பி வைக்கப்படுகின்றன. பர்மா-ஷெல்லில் உள்ள நாங்கள் அவற்றை போர்ட் 'இன்ஸ்டலேஷன்கள்' என அழைக்கிறோம். இந்த டாங்குகள் எல்லாம் நிரப்பி இருந்தால் அவைகளில் உள்ள எண்ணெய் ஜம்மு முதல் கன்யாகுமரிவரை வரிசையாக அடுக்கி வைக்கப்படும் காலன் டின்களை நிரப்பும்.

எங்கள் 7 போர்ட் இன்ஸ்டலேஷன்கள் டாங்குகளில் நிரப்பி வைப்பதுடன், எண்ணெய்களை வெளியிடங்களுக்கு அனுப்புவதற்கான ஏற்பாடுகளையும் கையாளுகின்றன. உங்களுக்கு நன்கு பழக்கமான ரெசின் டின்கள் இங்கு நிரப்பப்பட்டு ஆச தேசங்களுக்கு அனுப்பத் தயாராக இருக்கின்றன. மோட்டார் எண்ணெய்களும், கிரீஸ்களும் அவைகள் எளிதில் ஏற்றுமதி செய்வதற்கு வசதியாக சிறிய டின்களில் நிரப்பப்பட்டு அனுப்பப்படுகின்றன.

எந்த போர்ட் இன்ஸ்டலேஷனிலிருந்தும் கப்பல்கள் தங்களுக்குத் தேவையான எண்ணெய்களை நேரடியாகப் பெற முடியும். இந்தியாவின் பல பாகங்களில் ஏற்பட்டிருக்கும் எங்களது 793 டிப்போக்களுக்குத் தேவையான எண்ணெய்கள் தொடர்ந்து கிடைப்பதற்காக தினந்தோறும் ஆயிரக்கணக்கான ரெயில் வாகன்களும், பெட்ரோல் லாரிகளும் நிரப்பி அனுப்பப்படுகின்றன.

பர்மா-ஷெல்லின் போர்ட் 'இன்ஸ்டலேஷன்கள் தான் இந்தியாவின் எண்ணெய் வாசல்கள்' எனக்கூறலாம். இவை ஒரு பொழுதும் மூடாமல் இருக்கும்படி பார்த்து கொள்வது எங்கள் வேலையில் ஒன்று.



**பர்மா-ஷெல்... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

**BURMAH-SHELL... IN INDIA'S LIFE AND PART OF IT**





Wisdom

HARD NYLON

# உங்கள் புன்னகை பிரகாசிக்க —

மோகனமான புன்னகைக்கு, ஆரோக்கியமான வெண்மையான பற்கள் அவசியம். இதற்கு விஸ்டம் உங்களுக்கு உதவட்டும்! பற்களுக்குக் கேடு உண்டாகும் இக்கட்டான பல் இடுக்குகளில் புகுந்து சுத்தம் செய்யுமாறு விஸ்டம் டூத் பிரஷின் குஞ்சங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிரஷின் கைப்பிடி, பற்களைச் சுலபமாகச் சுத்தம் செய்ய உதவுகிறது. விஸ்டம் டூத் பிரஷ்கள், சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்கும் ஏற்ற சைஸ்களில் தயாரிக்கப்பட்டு தூசி தும்பு புக முடியாத உறைகளில் விநியோகிக்கப்படுகின்றன.

டிஸ்ட்ரிப்யூடர்கள்: ஜெ. எல். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிட்., தபால் பெட்டி 6527, பம்பாய் 26 & கிளைகள்.

## — விஸ்டம் உபயோகியுங்கள்

**சரியான உருவில் அமைந்துள்ள நைலான் டூத் பிரஷ்**

WT. 30

# பரமசிவனின் பட்டாக்கத்தி



உருதுக் கதை: கே. ஏ. அப்பாஸ் மொழிபெயர்ப்பு: வாஞ்சி

கிழக்தாய்! ஏன் அங்கு மழையில் நிற்கிறாய்? உள்ளே வா. மழை நிற்கும் வரையில் இந்த ஏழைக் கிழவியின் வீட்டில் ஒண்டிக் கொண்டிரு......அதுதான் சரி! இனி நீ மழையில் நனைய மாட்டாய்...நல்ல பிள்ளை...

கடவுள் சிருஷ்டியின் விசித்திரத்துக்கு எல்லை உண்டா? இந்த மழையைப் பார்! மலையிலிருந்து அருவி விழுவது போல், வானத்திலிருந்து பெரும் சப்தத்துடன் கொட்டுவதைப் பார்த்தாயா?

மழையின் சக்திக்கு எல்லையே இல்லை. காய்ந்து கருகிய பூமிக்கு உயிரைக் கொடுப்பது இந்த மழைதான். உயிரற்ற விதைகளைச் செடிகளாகவும் கொடிகளாகவும் மரங்களாகவும் உயிர்பெற்று எழும்படி செய்யும் சக்தியும் இந்த மழைக்குத்தான் உண்டு.

அது மாத்திரமா? மானிட வர்க்கத்தைச் சேர்ந்த நமக்கு உயிர் கொடுப்பதும் இந்த மழையே. மழை பெய்யாவிடில் மனித வர்க்கமும் காய்ந்து கருகி விட வேண்டியதுதான்!

இந்த மழைக்கு ஆக்கும் சக்தி மாத்திரமா இருக்கிறது? அழிக்கும் சக்தியும் இருக்கிறது!

இடைவிடாமல் மழை பெய்து வெள்ளம் ஏற்பட்டு விட்டால் உயிர்கள் நாசம் அடைகின்றன; பயிர்கள் பாழாகின்றன; பொருள்கள் அழிகின்றன.



புண்ணியம் செய்வோருக்கு மழை உயிரைக் கொடுக்கிறது; ஆனால் பாவம் செய்வோரின் உயிரைக் குடித்து விடுகிறது!

இது, எல்லாவற்றையும் அறியும் சக்தியுள்ள, எல்லாவற்றையும் பார்க்கும் சக்தி வாய்ந்த, எல்லாவற்றையும் ஆக்கவும் அழிக்கவும் வல்ல சிவபெருமானின் கட்டளை!

கடவுளின் ஆயுதங்கள் எண்ணில், எழுத்தில் அடங்காதவை.

அவற்றில் மிகவும் அற்புதமான, ஆனால் மகா பயங்கரமான ஓர் ஆயுதம் இருக்கிறது. அந்த ஆயுதத்தைப் பரமசிவன் தேவேந்திரனிடம் கொடுத்திருக்கிறார். தேவர்களுக்கெல்லாம் அரசனாக விளங்கும் தேவேந்திரனிடம் ஒரு சக்தி பொருந்திய ஆயுதம் இருக்க வேண்டியது அவசியம் அல்லவா?

அற்புதமான, கற்பனைக்கு எட்டாத அந்த ஆயுதத்தைப் பார்! அது அந்தகாரத்தையும் மேகங்களையும் கிழித்துக் கொண்டு வருவதைப் பார்!

இந்த ஆயுதத்தைத்தான் இடி என்று சொல்லுகிறார்கள். இந்த விசித்திரமான ஆயுதத்தின் ஒளியைத்தான் மின்னல் என்கிறார்கள்.

இந்த ஆயுதம் பரமசிவனின் பட்டாக்கத்தியாகும்.

இதைக் கேட்கும்போது உனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா?...ஆம், ஆச்சரியமாகத்தான் இருக்கும்.

ஆனால், சிவ பெருமானின் இந்தப் பட்டாக்கத்தி இருக்கிறதே, இது இரும்பினால் செய்யப்பட்டதல்ல; எஃகினால் வார்க்கப்பட்டதும் அல்ல, அப்பா! இரும்பினால், எஃகினால் செய்யப்பட்டிருக்கும் பட்சத்தில் அது துருப் பிடித்து விடும், முனை மழுங்கி விடும், அல்லது ஒடிந்து நொறுங்கி விடும்.

பரமசிவனின் இந்த அபூர்வமான பட்டாக் கத்தியோவெனில் கிடைப்பதற்கரிய ஓர் உலோகத்தினால் செய்யப்பட்டது. இது வைரத்தைக் காட்டிலும், இரும்பு, எஃகைக் காட்டிலும் கோடானு கோடி மடங்கு கெட்டியானது.

இடியைக் கண்டால் ஸர்ப்பங்கள் செத்து விடும் என்பதை நீ கேள்விப் பட்டிருக்கிறாயா ?...ஆமாம் ! இடிக்கும் மின்னலுக்கும் பயந்து விஷப் பாம்புகள் வளைகளில் போய் ஒளிந்து கொள்ளும்.

அவைகள் போன ஜன்மத்தில் மனிதர்களாக இருந்தவைதான். தங்களுடைய கொடிய வார்த்தைகளால் பிறரைத் துடிக்கச் செய்தவர்கள் ; பிறர் வாழ்க்கையை விஷமாக்கியவர்கள். அதனால்தான் அவர்கள் இந்த ஜன்மத்தில் கொடிய விஷத்தை வாயில் வைத்துக் கொண்ட பாவ ஜீவன்களாகப் பிறந்திருக்கின்றனர் ! இத்தகைய பாவ ஜன்மங்களைத் தண்டிப்பதற்காகவே பரமசிவன் ஜ்வாலை கக்கும் தமது பட்டாக் கத்தியைத் தேவேந்திரனிடம் கொடுத்திருக்கிறார்.

இந்தப் பட்டாக் கத்தி பாவ ஜன்மங்களை இரக்கமின்றி வீழ்த்திவிடும். இதை நீ நம்ப மாட்டாயா ?......அவ்வாறு வீழ்த்துவதை நான் நேரில் பார்த்திருக்கிறேன் ! நான் பொய் சொன்னால் அந்தப் பட்டாக் கத்தி என்னைப் பலிகொண்டு விடும், தெரியுமா ?

* * *

எனக்குச் சரியாக ஞாபகமில்லை. சுமார் இருபத்தைந்து அல்லது முப்பது வருஷங்களுக்கு மேல் இருக்கலாம். நமது ஊர் கோவிலுக்குப் பின்புறமாக ஒரு குளம் இருக்கிறது அல்லவா ? அதற்கு அப்பால் வயலில் காய்ந்து கருகிய கிளைகளுடன் பட்டுப் போன மரம் இருக்கிறது அல்லவா ? இன்று குச்சி குச்சியாக நிற்கும் அந்த மரம் ஒரு காலத்தில் பிரம்மாண்டமான வேப்ப மரமாக இருந்தது. அதைப் போன்ற பெரிய வேப்ப மரத்தை யாரும் பார்த்ததேயில்லை. மழைக்கோ, வெய்யிலுக்கோ பயந்து அதன் கீழ் ஜனங்கள் ஒண்டிக் கொள்வது உண்டு. அதன் நிழலில் பதினைந்து அல்லது இருபது பேருக்கு மேல் நிற்கலாம். ஆனால், நான் சொல்லப் போகும் சம்பவத்துக்குப் பிறகு அந்த மரத்தின் அருகில்கூட யாரும் செல்லுவதில்லை. அந்த மரத்தைப் பார்த்தாலே எல்லோருக்கும் பயம் !

நான் கூறப்போகும் சம்பவம் நிகழ்ந்த வருஷத்தில் சேர்ந்தாற் போல் பல நாட்கள் வரையில் மழை பெய்தது. யாரும் வீட்டுக்கு வெளியே கிளம்ப முடியவில்லை. அந்த மழையில் நம் ஊருக்கு அப்பால் உள்ள ஒரு தனிக் குடிசையின் சுவர் விழுந்து பத்து மாதக் குழந்தையொன்று இறந்து விட்டது.

ஏன் என்னைப் பார்க்கிறாய் ? என் கண்களில் நீர் வருவதையா பார்க்கிறாய் ? நான் அழுவதாக நினைக்கிறாய் அல்லவா ? இல்லவே இல்லை. இந்தக் கிழவிக்கு அழுவதற்கு என்ன இருக்கிறது ? கண்ணில் ஏதோ தூசி விழுந்து விட்டது. அதனால்தான் ஜலம் வருகிறது....

கடைசியாக ஒருநாள் மழை நின்றது. எனவே மறுபடியும் மழை வருவதற்குள் தங்கள் தங்கள் அலுவல்களை முடித்துக் கொண்டு வீடு திரும்பி வந்துவிட வேண்டும் என்பதற்காகப் பலரும் வெளியே புறப்பட்டுச் சென்றனர். ஆக்ரா ரோடை அடுத்துள்ள ராஜபுரி கிராமத்தில் அன்று சந்தையானதால் பலர் அங்கு சென்றிருந்தனர்.

அச்சமயத்தில் திடீரென்று மறுபடியும் பெருமழை பெய்யத் தொடங்கியது. பலரும் மழைக்குப் பயந்து கிடைத்த இடத்தில் போய் ஒண்டிக் கொண்டார்கள்.

வெவ்வேறு திக்கில் சென்றிருந்த நால்வர் யாத்திரம் ஒவ்வொருவராக வந்து அந்த வேப்ப மரத்தடியில் ஒண்டிக் கொண்டனர். அவர்களுடைய விதி அவர்களை ஒருங்கே அந்த இடத்தில் கொண்டுவந்து சேர்த்து விட்டது போலும் !

அந்த நால்வரில் யாரையும் நீ பார்த்திருக்க முடியாது. ஏனெனில் அப்போது நீ பிறக்கவேயில்லை. எனினும் அவர்களில் ஒருவரைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம். அவர்தான் நமது கிராமத்தில் உள்ள தற்போதைய ஜமீன்தாரின் மூத்த சகோதரர். அவரது பெயர் தாகூர் ஹரநாம சிங்.



அவர் இளைஞர்; மன்மதனைப்போல் மிகவும் அழகாக இருப்பார். அவரைக் கல்யாணம் செய்துகொள்ள எந்தப் பெண் பாக்கியம் செய்திருக்கிறளோ என்று எல்லாரும் பேசிக் கொண்டார்கள். அவர் தனக்குக் கணவராக வாய்க்கக் கூடாதா என்று பல பெண்கள் ஏங்கியது கூட உண்டு.

இது என்ன? என் கண்களில் ஏன் மறுபடியும் ஜலம் வருகிறது என்று பார்க்கிறாயா? உள்ளே அடுப்பு அணைந்திருக்கும்....அந்தப் புகையினால்தான் ஜலம் வருகிறது...

வேட்டையாடுவதில் தாகூருக்கு உள்ள ஆசையைச் சொல்லி முடியாது. அன்று மழை விட்டதும் அவர் பட்சிகளை வேட்டையாடுவதற்காகக் குதிரை மீதேறிச் சென்றிருந்தார். திரும்பி வரும்போது மழை தாங்க முடியாததால் குதிரையை அப்பால் நிறுத்திவிட்டு அவர் மாத்திரம் மரத்தடியில் வந்து ஒண்டிக் கொண்டார்.

அவர் வருவதற்கு முன்பே அந்த மரத்தடியில் மூன்று பேர் நின்று கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர்தான் பண்டித தர்ம தாஸ். அவர் கிராமப் புரோகிதர். வேத சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்தவர். அந்தக் கிராமத்தில் உள்ள ஜனங்களின் ஒழுக்கம் கெட்டு விடாமல் இருப்பதற்காகவே தம்மை இறைவன் சிருஷ்டித்திருப்பதாக அவர் எண்ணிக் கொண்டிருந்தார். அப்படியிருக்கச் சாந்தா என்ற பெண் செய்த காரியத்தை அவரால் எப்படிச் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

சாந்தா, நகைக் கடையில் வேலை செய்து கொண்டிருந்த மூலாராமின் பெண். அவளுக்கு விவாகம் ஆவதற்கு முன் அவள் செய்த பாவத்தை உலகத்துக்கு எடுத்துக் காட்டுவதுபோல் ஒரு குழந்தையும் பிறந்து விட்டது. அந்தக் குழந்தையின் தந்தை யார் என்பதைச் சொன்னால் அவன்மீது தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்வதாகப் பண்டித தர்ம தாஸும் மற்ற முக்கியஸ்தர்களும் எவ்வளவோ வற்புறுத்தினார்கள்.



"எனக்கு என்ன தண்டனை வேண்டுமாயினும் கொடுங்கள். என்னைக் கொன்றாலும் கொன்று விடுங்கள். ஆனால் நான் அவருக்குத் துரோகம் செய்ய மாட்டேன். அவருடைய பெயரை வெளியிட மாட்டேன்" என்று சாந்தா கண்டிப்பாகக் கூறிவிட்டாள்.

எனவே தர்ம தாஸின் தீர்ப்புக் கிணங்க அவளை ஊரை விட்டு விரட்டிவிட்டார்கள். கைக்குழந்தையுடன் விரட்டப்பட்ட சாந்தா எங்கு போவாள்?

குழந்தையுடன் ஹோவென்று கதறிக் கொண்டு சென்ற சாந்தாமீது ஊருக்கு அப்பால் தனிக் குடிசையிலிருந்த கிழவர் இரக்கம் கொண்டு தம் குடிசையில் அவளுக்கும் குழந்தைக்கும் இடம் கொடுத்தார்.

அந்த வேப்ப மரத்தடியில் ஒண்டிக் கொண்டிருந்த மூன்றாவது பேர்வழிதான் மூல்சந்த் என்பவர். அவர் லேவாதேவித் தொழில் நடத்தி வந்தார். ராஜபுரி கிராமத்தில் வேறு யாருமே அந்தத் தொழிலில் ஈடுபடாததால், மூல்சந்துக்கு நல்ல கிராக்கி இருந்தது. பண முடையால் கஷ்டப்படுவோர் மூல்சந்தின் உதவியையே நாடினார்கள். ஜனங்களின் பணக் கஷ்டத்தைத் தீர்த்து உதவி புரியவே தாம் அத்தொழிலை நடத்தி வருவதாக மூல்சந்த் அடிக்கடி சொல்லுவது வழக்கம். நிலத்தையோ அல்லது நகைகளையோ அடமானமாகக் கொண்டுதான் அவர் கடன் கொடுப்பார். மேற்படி கடனுக்கு அதிக வட்டியும் விதிப்பார். பணம் கொடுக்கும் போதே ஒரு வருஷ வட்டியை எடுத்துக் கொண்டு விடுவார். எனினும் அதற்காக மூல்சந்தை யாரும் குறை கூறுவதில்லை. ஏனெனில் லேவா தேவி விதிகள் அப்படித்தான் அல்லவா? மூல்சந்த் ஏழைகளிடம் அமித வட்டி வாங்கி வந்தார். என்றாலும், தர்ம காரியங்களுக்குத் தாராளமாகப் பணம் கொடுக்க எக்காலத்திலும் தயங்கியதில்லை! அவ்வளவு தர்மகுணம் படைத்த மூல்சந்த் கூட, பண்டித தர்ம தாஸின் இளகிய மனதையும் இரக்க சுபாவத்தையும் பாராட்டினார்.

"பண்டிட்ஜீ! நீங்கள் கருணை உள்ளம் படைத்தவரானதால், சாந்தாவை இத்துடன் விட்டீர்கள். வேறு ஒருவராக இருந்தால் அவள் செய்த காரியத்துக்கு அவளுடைய கால்களை நொறுக்கிக் கிணற்றில் தள்ளியிருப்பார்கள்" என்றார் மூல்சந்த்.

அந்த மரத்தடியில் ஒண்டிக் கொண்டிருந்த நாலாவது ஆசாமிதான் ரஹ்மத் கான். அவர் அந்தக் கிராமத்துக் கணக்குப்பிள்ளை. கிராமத்தில் உள்ள நில புலன்கள் சம்பந்தமான சகலவிதக் கணக்குகளும் தஸ்தாவேஜுகளும் அவரிடம்தான் இருந்தன.



"முன்பு நீ வேலை செய்து கொண்டிருந்த இடத்திலே ஏன் உன்னை நிறுத்தி விட்டார்கள்?"

"அந்த வீட்டு அம்மாளின் மாமியார் குளத்திலே தவறி விழுந்து விட்டாங்க. நான் அவங்களைக் காப்பாத்தினேன். அதனாலே அந்த அம்மாவுக்கு என்மேலே கோவம், நிறுத்தி விட்டாங்க!"

---

இந்தக் கணக்குப் பிள்ளைகளின் மகிமை இக்காலத்தில் மிகவும் குறைந்து விட்டது. அதை அந்தக் காலத்தில் அல்லவா பார்க்க வேண்டும்! அக்காலத்தில் அரசன், வைஸ்ராய், கவர்னர், கலெக்டர் எல்லாம் அவர்கள் தான்! கணக்குப் பிள்ளையின் தயவின்றி எவரும் வாழ முடியாது.

கிராமக் குடியானவர்களுக்குப் படிக்கத் தெரியாது. எனவே ரஹ்மத் கான், தாம் சொன்ன இடத்தில் அவர்களுடைய கைரேகை முத்திரைகளை வாங்கிக் கொண்டு புதிய புதிய தஸ்தாவேஜுகளைச் சிருஷ்டித்து வந்தார். அவர் செய்யும் மேற்படி உதவிக்காகப் பலர் பணம் கொடுப்பது உண்டு. இதைத்தான் விஷயம் தெரியாதவர்கள் லஞ்சம் என்று குறை கூறுகிறார்கள்.

ரஹ்மத் கான் ஆண்டவனுக்குப் பயந்து நடப்பவர். தினந்தோறும் அந்தக் கிராமத்திலுள்ள மசூதிக்குச் சென்று ஐந்து தடவை தொழுவார். அவரது வெண்மையான நீண்ட தாடியைப் பார்த்தாலே அவர் ஆண்டவனிடம் பக்தியுள்ளவர் என்பதை எவரும் தெரிந்து கொள்ளலாம்!

அவர் ஒரு தடவை மெக்காவுக்கு யாத்திரை சென்று வந்தார். மறுபடியும் யாத்திரை செல்ல உத்தேசித்திருந்தார். எனவே அவர் செய்யும் உதவிக்காகப் பணம் கொடுப்போர் அவர் மெக்கா போய் வருவதற்குச் சௌகரியமாக இருக்குமென்று மனமுவந்து அதிகத் தொகை கொடுப்பது வழக்கம்.

ரஹ்மத் கானுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். இளைய மனைவிக்கு இருபது வயது இருக்கலாம். அதாவது அவருடைய மூத்த மனைவிக்குப் பிறந்த பெண்ணைக் காட்டிலும் இளைய மனைவி ஒன்றிரண்டு வயது பெரியவள்.

ரஹ்மத் கான் ஏழைகளான தொழிலாளர்களை அடித்துத் துன்புறுத்துவார் என்றாலும் அந்த ஊர் ஜமீன்தார், உயர்தர அதிகாரிகள் முதலியோரிடம் மிகவும் மரியாதையுடன் நடந்து கொள்வார். சிற்சில சமயங்களில் உயர்தர அதிகாரிகளின் நயவைச் சம்பாதித்துக் கொள்வதற்காக ரஹ்மத் கான் அவர்களுக்கு விருந்து வைப்பதும் உண்டு.

இந்த நால்வரும் வேப்பமரத்தடியில் நின்று கொண்டு, மழை எப்போது நிற்குமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது சாந்தாவும் அவளுக்கு அடைக்கலம் கொடுத்த கிழவரும் அந்த வழியாக வருவதைக் கண்டு அவர்கள் திடுக்கிட்டனர். ஏனெனில் அவ்விருவரும் மேற்படி மர நிழலில் ஒதுங்குவதற்காகத்தான் வேகமாய் வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களைப் பார்த்ததும், "இங்கு வராதீர்கள்! 'இங்கு வராதீர்கள்!" என்று கூக்குரலிட்டார் தர்ம தாஸ்.

அவரது கூக்குரலைக் கேட்டதும் சாந்தாவும் அந்தக் கிழவரும் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டார்கள்.

"நீங்கள் இங்கு வந்தால் எங்கள் எல்லோருக்கும் ஆபத்து ஏற்படும்" என்று மறுபடியும் கத்தினார் தர்ம தாஸ்.

இதைக் கேட்ட ரஹ்மத் கான் ஆச்சரியமடைந்து, "என்ன ஆபத்து ஏற்படும்?" என்று கேட்டார்.

"பாவிகள் இருக்கும் இடத்தில் இடி விழும் என்று சொல்லுவார்கள். சாந்தா மன்னிக்க முடியாத பாவம் செய்தவள். அவளுக்கு அடைக்கலம் கொடுத்ததால் அந்தக் கிழவனும் பாவம் செய்தவன்தான். இடியும் மின்னலும் பிரமாதமாக இருக்கும் இந்தச் சமயத்தில் அவர்கள் இங்கு வந்தால் என்ன ஆகுமோ?" என்றார் தர்ம தாஸ்.

உடனே ரஹ்மத் கான் நடு நடுங்கிப் போய் குரானிலிருந்து சில வாக்கியங்களை முணுமுணுத்தார். "அப்படியானால் அவர்களை இங்கு வரவிடக் கூடாதுதான்" என்று ஆமோதித்தார்.

உடனே அந்தக் கிழவர் தாகூரைப் பார்த்து, "மகாராஜா, பாவம்! இந்த மழையில் என் குடிசை விழுந்து விட்டது. அதில் இந்தப் பெண்ணின் குழந்தையும் நசுக்குண்டு இறந்து விட்டது. இவளுக்குக் குளிர் தாங்க முடியவில்லை. 'நீங்கள் சிறிது நேரத்துக்கு இடம் கொடுக்கா விட்டால் இவள் ஜன்னி கண்டு இறந்துவிடுவாள்" என்று கெஞ்சினார்.

தாகூர் அங்கு நிற்பதைக்கண்டதும் சாந்தா வெறி பிடித்தவள் போல் மரத்தடியில் அவர் நிற்கு மிடத்துக்கு வர முயற்சித்தாள்.

"இங்கே வராதே! இங்கே வராதே! உன் பாவத்தின் அறிகுறியான குழந்தைக்குக் கடவுள் சரியான தண்டனை கொடுத்து விட்டார்" என்று கூக்குரலிட்டார் தர்ம தாஸ்.

அவர் வார்த்தையைச் சாந்தா லட்சியம் செய்யாமல் முன்வரவே, "தாகூர் சாகேப், உங்களிடம் துப்பாக்கி இருக்கிறதே, அதனால் இவளைச் சுட்டுவிடுங்கள். இல்லா விட்டால் கடவுளின் கோபத்துக்கு நாம் எல்லாருமே ஆளாக வேண்டி யிருக்கும்" என்று தர்ம தாஸ் அலறினர்.

சாந்தா அருகில் வருவதால் தனக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்று நடுங்கிய தாகூர் உடனே தமது துப்பாக்கியை எடுத்துச் சாந்தாவைக் குறி பார்த்துச் சுட யத்தனித்தார்.

ஆனல் அதைக் கண்டு சாந்தா பயப்பட வில்லை, பின் வாங்கவு மில்லை. தாகூரை உற்றுப் பார்த்துக் கொண்டே முன் வந்தாள்.

"நீங்கள் ஏற்கெனவே என்னைக் கொன்று விட்டீர்கள். என் வாழ்வைக் குலைத்துவிட்டீர்கள். என்னை இப்போது சுட்டு வீழ்த்தி விடுங்கள். இதைக் காட்டிலும் சிறந்த மரணம் எனக்கு ஏற்படுவது முடியாத காரியம். தாமதிக்காமல் சுட்டுவிடுங்கள். என் மகன்—உங்கள் மகன் போன விடத்துக்கு நானும் போய்விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே சாந்தா முன் வந்தாள்.

"இவள் பேசுவதைப் பாருங்கள்! இவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. உடனே சுட்டு விடுங்கள்" என்று மற்ற மூவரும் குதித்தார்கள்.

தாகூர் தன் துப்பாக்கியைச் சாந்தாவின் மார்புக்கு நேராக உயர்த்தினர். அவ்வளவு தான்! அஷ்ட திக்குகளும் அதிரும்படியாக ஒரு பேரிடி முழக்கம் கேட்டது.

சாந்தாவும் கிழவனும் கீழே விழுந்தனர். அவ்விருவரும் அப்போது தாங்கள் இறந்து விட்டதாகவே நினைத்தார்கள்.

அவர்களுடைய அதிர்ச்சி அடங்குவதற்குச் சில நிமிஷங்கள் ஆயின. பின்னர் எழுந்து பார்த்தபோது வேப்பமரம் காய்ந்து கருகிக் கிடந்தது. அதன் கிளைகளும் இலைகளும் இருந்த இடமே தெரியவில்லை. உருவமே தெரியாமல் எரிந்த நாலு பிரேதங்களும் அங்கு சின்னபின்னமாகக் கிடந்தன.

ஆமாம்! பரமசிவனுடைய பட்டாக்கத்தியான இடியின் முன்னிலையில் ஆயிரம் ஆயிரம் துப்பாக்கிகளோ, வெடி குண்டுகளோ என்ன செய்துவிட முடியும்......?

ஏன்? மழை நின்று விட்டதால் புறப்பட்டு விட்டாயா? பார்! மறுபடியும் என் கண்களிலிருந்து ஜலம் வழிகின்றது. நீ இந்த ஊரில் உள்ள வைத்தியரிடமிருந்து இதற்கு ஏதாவது மருந்து வாங்கி வந்து தருவாயா?

"யாருக்கு மருந்து?" என்று கேட்டால், "சாந்தா கிழவி என்னை அனுப்பினள்" என்று வைத்தியரிடம் சொல்லு!




வித்துவான் வேத நாயகம் தம் வாழ்க்கையின் எண்பத்திரண்டாவது மைல் கல்லைத் தாண்டி விட்டார். வாழ்க்கைக்கு ஓர் வரன் முறை வகுத்து, அதன் பிரகாரம் பிறழாமல் நடந்து வந்ததனால் அவரைச் சோம்பல் அண்டினதில்லை. அதனால் தானோ என்னவோ, லட்சுமி தேவியின் பரிபூரண கடாட்சம் அவருக்கு ஏற்பட்டிருந்தது. அவருடைய ஒவ்வொரு பேச்சும் பொன்; கணமும் பணம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! நிமிஷத்துக்குப் பணத்தை இரண்டு கைகளாலும் அரித்துக் கொட்டிக் கொண்டிருந்த அவருக்குத் தம் அலுவல்களைக் கவனிக்க நாளைக்கு நாற்பத்தெட்டு மணி நேரமாயிருக்கக் கூடாதா என்றுகூடத் தோன்றும். மனம் நோகாமல் பிறரைப் பரிகாசம் செய்வதில் அவருக்கு இணை அவர்தான். அவர் கண்களில் அகப்பட்டவர்கள் யாரும் அவர் வாயில் புகுந்து புறப்பட்டாக வேண்டும். 'அவர் வாயில் புகுந்து புறப்படும் பாக்கியம் நமக்குக் கிட்டாதா!' என்று ஏங்குவர் சிலர். 'அவர் வாயில் புகுந்து புறப்படாமல், இருக்க வேண்டுமே! நம்மைச் சந்தி சிரிக்கவைத்து விட்டால் என்ன செய்வது!' என்று அஞ்சுவர் வேறு சிலர். பேச்சில் பிறர் அவரிடம் தோற்பரே ஒழிய அவர் இதுகாறும் பிறரிடம் தோற்றதில்லை. அத்துடன் அவர் வெகு சிக்கனமான பேர்வழியும் கூட. காலணா செலவு செய்வது என்றால்கூட ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாக யோசித்துத்தான் செலவு செய்வார். வாழும் வகையை நன்கு உணர்ந்து கட்டுப்பாட்டுடன் நடந்து வந்ததனால்தானோ என்னவோ, அவரைப் பிணியும் அணுக அஞ்சிற்று.

அன்று ஒரு நாள் விடியற்காலை. ஏனோ, தெரியவில்லை! அவருக்குச் சற்றுச் சீக்கிரமாகவே விழிப்புக் கொடுத்து விட்டது. உடம்பும் என்னவோ போலிருந்தது. என்றும் இல்லாமல் இன்று இப்படி இருக்கிறதே என்று நினைத்த அவர் உடனே ஒரு டாக்டருக்குச் சொல்லி அனுப்பி விட்டுத் தாம் மறுபடியும் படுக்கையில் படுத்து விட்டார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவரைப் பார்ப்பதற்காக டாக்டர் வந்தார். மாடிப்படி ஏறி வந்த டாக்டருக்கு மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. நெற்றியில் வியர்வை முத்து முத்தாக அரும்பியிருந்தது. அவர் தம் கைக்குட்டையை எடுத்து அதைத் துடைத்துக் கொண்டு, "அப்பப்பா! இந்தப் படிக்கட்டுகள் ஏறி வருவது என்றால் எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது, தெரியுமா!" என்றார்.

டாக்டர் களைத்துப் போய் வந்திருப்பதைக் கண்ட வேதநாயகம் மிகப் பெருந்தன்மையுடன் பக்கத்தில் உள்ள நாற்காலியைச் சுட்டிக் காட்டிச் சிறிது நேரம் களைப்பாறும்படி ஜாடை காட்டினார். டாக்டரும் அதன் பிரகாரமே நாற்காலியில் உட்கார்ந்தார்.

சிறிது நேரம்வரை அறையில் அமைதி நிலவியிருந்தது. டாக்டர் அடிக்கடி கைக்குட்டையால் முகத்தைத் துடைத்து விட்டுக் கொண்டிருந்ததோடல்லாமல் தலையையும் பிடித்து விட்டுக் கொண்டார்.

அதைப் பார்த்த வேதநாயகம், "ஏன்! தலையை வலிக்கிறதா, என்ன!" என்று கேட்டார்.

"ஆமாம், எனக்கு எப்பொழுதுமே கொஞ்சம் தலைவலி உண்டு. இப்பொழுது இவ்வளவு படிக்கட்டுகள் ஏறி வந்தேனா! தலைவலி மண்டையைப் பிளக்கத் தொடங்கி விட்டது!" என்றார் டாக்டர்.

"அப்படியா!" என்று கேட்ட வண்ணம் வேதநாயகம் தம் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து மருந்துப் புட்டிகள் வைத்திருக்கும் பெட்டியருகே சென்றார். அதைத் திறந்து அதிலிருந்து ஒரு மாத்திரையை எடுத்து ஒரு கிளாஸ் தண்ணீரில் கரைத்துக் கொண்டு வந்து டாக்டரிடம் கொடுத்து, "இந்தாருங்கள்! இதைச் சாப்பிடுங்கள். சில நிமிஷங்களில் கட்டாயம் குணம் தெரியும்!" என்று சொன்னார். இதென்ன வேடிக்கை! தமக்கு வைத்தியம் செய்ய வந்த டாக்டருக்கே அல்லவா வேதநாயகம் வைத்தியம் செய்யும்படி ஆகிவிட்டது!

டாக்டர் அந்த மருந்தை வாங்கிச் சாப்பிட்டு விட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். இரண்டு நிமிஷங்கள் ஆனதும், வேதநாயகம் டாக்டரைக் கூப்பிட்டு, "ஏன், டாக்டர்! இப்பொழுது தலைவலி எப்படி இருக்கிறது!" என்று கேட்டார்.

"எவ்வளவோ குறைந்திருக்கிறது. உங்கள் உதவிக்கு என் நன்றி!" என்று டாக்டர் வேதநாயகத்துக்கு மனமார்ந்த நன்றி தெரிவித்தார்.



வேதநாயகம் சிறிது நேரம் அந்த அறையில் உலாவிக் கொண்டேயிருந்தவர், சட்டென்று நின்று, "டாக்டர்! உங்கள் தலைவலிக்குக் காரணம் படிக்கட்டிகள் ஏறி வந்தது அல்ல!" என்றார்.

"அப்படியானால் வேறு என்ன!" என்று கேட்டார் டாக்டர்.

"நீங்கள் கண்டது கேட்டது எதையாவது சாப்பிட்டிருப்பீர்கள்!"

"இல்லையே!"

"அது இருக்கட்டும். உங்களுக்கு இப்பொழுது என்ன வயது!" என்று கேட்டார் வேதநாயகம்.

"எனக்கா! நாற்பத்தி மூன்று!"

"இவ்வளவுதானா! எனக்கு உங்களைப் போலக் கிட்டத்தட்ட வயது இரண்டு மடங்கு ஆகி விட்டது. இன்னும் நான் எவ்வளவு திடசாலியாக இருக்கிறேன், பார்த்தீர்களா!" என்று சொல்லி வந்த வேதநாயகம், "டாக்டர் ஸார்! நான் சொல்கிறேனே என்று கோபித்துக் கொள்ளக் கூடாது. உங்களைப் போன்ற டாக்டர்கள் எல்லாரும் சரியாகச் சிகிச்சை செய்வதே யில்லை. ஏதோ ஒன்றுக் கொன்று செய்து குளறுபடியாக்கி விடுகிறீர்கள்" என்றார்.

"ஆமாம், ஸார்! ஒவ்வொரு சமயத்தில் தடுமாற்றத்தில் அப்படி ஏதாவது நேர்ந்து விடுவது உண்டுதான்!" என்று தம் தவறை ஒப்புக்கொண்டார் டாக்டர்.

"உங்கள் அத்தனை வயதில் நான் எப்படி இருந்தேன், தெரியுமா! கல்லைத் தின்று ஜீரணிக்க வேண்டிய வயது அல்லவா இது! என் டாக்டர், உங்களுக்கு ஆசனங்கள் செய்யத் தெரியுமோ!" என்று கேட்டார் வேதநாயகம்.

"தெரியாதே!" என்றார் டாக்டர்.

இதைக் கேட்டதுதான் தாமதம்; வேதநாயகம் கீழே விரிப்பு ஒன்றை எடுத்துப் போட்டுக் கொண்டு டாக்டருக்கு ஆசனங்கள் செய்து காட்டத் தொடங்கி விட்டார். பிறகு டாக்டரைப் பார்த்து, "நீங்களும் இந்தமாதிரி ஆசனங்கள் செய்தால் உங்கள் உடலில் ஒரு விதச் சுறுசுறுப்பு உண்டாகும். தெரிந்ததா!" என்றார்.

அதைக் கேட்ட டாக்டர், "நீங்கள் சொல்லுவது வாஸ்தவம்தான்!" என்று தலையை ஆட்டினார்.

"என் இந்த ஆலோசனைக்கு என்ன பீஸ், தெரியுமா! ஐந்து ரூபாய்! எடுத்து வையுங்கள், கீழே!" என்றார் வேதநாயகம்.

"மன்னிக்கணும். என் பீஸ் பத்து ரூபாய். அதை முதலில் வையுங்கள்!" என்றார் டாக்டர்.

"என்ன ஸார் இது! அநியாயமா யிருக்கிறது. நீங்கள் அல்லவா வியாதியஸ்தராகப் படுத்தீர்கள்! நான் உங்களுக்கு வைத்தியம் அல்லவா செய்தேன்! அப்படி யிருக்கும்பொழுது என்னிடம் பணம் கேட்கிறீரே, இது நியாயமா! நீங்களே சொல்லுங்கள்!" என்றார் வேதநாயகம்.

"இல்லை, ஸார்! நான் சிகிச்சைக்கு மேற்கொள்ளும் முறையே தனி. நோயாளிகள் வீட்டுக்குச் சென்று நானே நோயாளியாகப் படுத்துவிடுவேன். ஆகவே என் நோயாளிகள் தங்கள் நோய்களை மறந்து எனக்குத் தொண்டு செய்யத் தொடங்கி விடுவார்கள். இப்பொழுது நான் சிகிச்சை செய்யும் முறை புரிந்ததா, உங்களுக்கு!" என்றார் டாக்டர் சிரித்துக் கொண்டே.

வேதநாயகம் வாயடைத்துப் போய் விட்டார். என்ன சொல்வதென்று அவருக்குச் சிறிது நேரம் விளங்கவில்லை. அடுத்த கணம் பதினைந்து ரூபாய்க்கு ஒரு செக் எழுதி டாக்டரின் கையில் கொடுத்து, "இது வரை நான் டாக்டர்களைப் பரிகாசம் செய்து வந்தேன். இன்று என்னடாவென்றால் நானே அல்லவா அந்தப் பரிகாசத்துக்கு இலக்காகும்படி ஆகிவிட்டது! ஆகவே, உங்கள் சாமர்த்தியத்தை மெச்சி உங்கள் பீஸைப் பதினைந்து ரூபாயாக உயர்த்தி யிருக்கிறேன். யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கும் ஒரு காலம் வரும் என்பது உண்மைதான்!" என்றார்.

அவர் சொன்னதில் என்ன தவறு!




## 16. பணமா பெரிது?

பொன்னி வெப்பிரகாசம் இருக்கும் அறையின் கதவைத் தள்ளினாள். அது தானாகவே திறந்து கொண்டது. மெதுவாக உள்ளே சென்றாள். வெப்பிரகாசம் இன்னும் தூங்காமல் அந்தச் சிறிய அறையில் அப்படியும் இப்படியுமாக உலாவிய வண்ணமா யிருப்பது அவளுக்கே சிறிது ஆச்சரியத்தை அளித்தது.

வெப்பிரகாசம் பொன்னியைக் கண்டதும் கலவரம் சூழ்ந்திருந்த தன் முகத்தில் ஒரு புன்னகையை வருவித்துக் கொண்டு, "ஓ! நீயா! வா! இந்தச் சமயத்தில் என் மனதிற்கு நிம்மதி ஏற்படுத்த நீ வந்தது எதிர்பாராத அதிர்ஷ்டம்தான்!" என்று சொல்லி அவளை வரவேற்றார்.

பொன்னியும் தன் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "உங்களுக்கு இந்த இடம் சௌகரியமாக இருக்கிறதா!" என்று கேட்டாள்.

"என் சௌகரியத்தை விரும்பக்கூடிய பெண் நீ ஒருத்தியாவது இந்த வீட்டில் இருக்கிறாயே... அது போகட்டும். நான் சென்ற இடங்களில் எல்லாம் எந்தச் சௌகரியத்தையும் விரும்புவதில்லை. பிறர் தயவையும் வேண்டுவதில்லை."

"அது சரிதான். இருந்தாலும் சில விஷயங்களுக்குச் சிலர் தயவை வேண்டத்தான் வேண்டியிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே பொன்னி அந்த அறைக் கதவைச் சாத்தினாள். பிறகு அவருக்குச் சமீபமாக வந்து, "நான் உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன்" என்றாள்.

"என்ன! இந்த நிசி வேளையில் வந்து......" என்று சொல்லி நிறுத்தினார் வெப்பிரகாசம்.

"இன்று ராத்திரிக்குள்ளேயே கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் அது......"

"அப்படிப்பட்ட விஷயம் என்னவோ!"

"நாளைய தினம் நீங்கள் உங்கள் பெண் வேதாவை அழைத்துக் கொண்டு போகப் போகிறீர்களாமே!"

"ஆமாம்! அதை யார் அதற்குள் உனக்குச் சொன்னது!" என்று சொல்லிப் பொன்னியின் முகத்தைப் பார்த்தார் வெப்பிரகாசம். அப்போது அவருடைய முகத்தில் ஒரு வகையான சம்சயமும் சந்தேகமும் ஏற்பட்டிருந்தன.

"இதை உங்கள் பெண்ணேதான் என்னிடம் சொன்னாள்!"

"எப்பொழுது உன்னிடம் சொன்னாள்!"

"இப்பொழுதுதான்! இது எனக்குத் தெரிந்ததில் உங்களுக்கு ஏதேனும் இடையூறோ!"

"அதெல்லாம் எனக்கு ஒரு இடையூறும் இல்லை. வேதா இன்னும் தூங்காமலா இருக்கிறாள்!" என்று கேட்டார் வெப்பிரகாசம்.

"ஆமாம். வேதா இன்னும் தூங்கவில்லைதான். அவள் இவ்வளவு நேரம் வரை தூங்காமல் இருப்பதில் உங்களுக்குக் கவலை போலிருக்கிறது. இருக்காதா! என்ன இருந்தாலும் பெண்ணல்லவா! பாசம் விடுமா!" என்றாள் பொன்னி.

"ஹூம். சரி! நீ இப்பொழுது அவள் அறைக்குச் சென்றிருந்தாயா!"

"ஆமாம்! நான் இந்த வீட்டிற்கு வந்த நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் ராத்திரி வேளையில் அவளுடைய அறைக்குப் போவேன். நாங்கள் இரண்டு பேரும் நெடு நேரம் வரையில் பேசிக் கொண்டிருப்போம்" என்றாள் பொன்னி.

வெப்பிரகாசம் சிரித்துக்கொண்டே, "சரிதான். உங்கள் இரண்டு பேருக்கும் ஆரம்பத்திலிருந்தே ஒரு கள்ளத்தனமான சிநேகிதம் இருக்கும் போலிருக்கிறது. ......அதனால் பாதகமில்லை. இது மரகதத்துக்கும் அந்த ராட்சஸி செங்கம்மாவிற்கும் கூடத் தெரியாதோ!" என்று கேட்டார்.



பேரன்:— பாட்டி, இன்றைக்கு நான் பள்ளிக்கூடத்திலே நடக்கும் ஓட்டப் பந்தயத்திலே ஓடப் போகிறேன்!

பாட்டி:—என்னவோ, அப்பா! பார்த்து நிதானமாக ஓடு. விழுந்தடித்துக் கொண்டு ஓடாதே!

"தெரியுமோ, தெரியாதோ! அதைப் பற்றிக் கவலே இல்லே. நீங்கள் வேதாவைப் பம்பாய்க்கோ கல்கத்தாவிற்கோ அழைத்துப் போகப் போவதாக அவளிடம் சொன்னது உண்மைதானு!" என்று கேட்டாள் பொன்னி தீவிரமான குரலில்.

"ஆமாம், சொன்னேன்!"

"சொன்னீர்களா! எதற்காக அவளே அழைத்துக் கொண்டு போகப் போகிறீர்கள்!"

"எதற்காகவா!" என்று சொல்லி விட்டுச் சிவப்பிரகாசம் ஒரு சிரிப்புச் சிரித்தார். "அவளேப் போன்ற ஒரு அழகான பெண்ணே வெளியுலகம் காணுமல், சிறைப்பிடித்து வைத்திருப்பது போல் இந்தப் பாழும் மடத்தில் அடைத்து வைத்திருப்பதைச் சகித்துக் கொண்டிருக்க முடியுமா! நான் அவளே முதன் முதலில் பார்த்ததும் அவளுடைய அழகைக் கண்டு அப்படியே பிரமித்து விட்டேன். அவளுடைய தாயாரும் மிகுந்த அழகிதான். ஆனுல் வேதாவைப் போன்ற அவ்வளவு அழகான பெண்ணே இதுவரையில் நான் எங்குமே பார்த்ததில்லே. அவளுடைய தகப்பனுகிய எனக்கு இதைவிட வேறு என்ன பெருமை வேண்டும்!" என்ருர்.

"இருக்கலாம். ஆனுல் வேதாவிற்கு உங்களோடு பம்பாய்க்கோ கல்கத்தாவிற்கோ வரப் பிரியமில்லே என்று உங்களுக்குத் தெரியுமா!" என்று கேட்டாள் பொன்னி.

"ஓஹோ, அப்படியா! ஆனுல் நான் அவளுடைய தகப்பன். அவளுடைய தகப்பன் என்ற முறையில் எனக்கு எது கடமை என்று தோன்றுகிறதோ, அதைச் செய்ய நான் தயங்க மாட்டேன். இவளேப் போன்ற அழகான பெண்ணேப் பம்பாயிலோ கல்கத்தாவிலோ ஒருவருமே பார்த்திருக்க முடியாது. அவளே மாத்திரம் அங்கு அழைத்துக் கொண்டு போய்விட்டால் எத்தனேயோ கோமகவரர்களே நான் என் கைக்குள் போட்டுக் கொண்டு விடுவேன். அவளும் அதிர்ஷ்டக் காரியாகி விடுவாள்" என்ருர் சிவப்பிரகாசம்.

"சரிதான். தங்கமான யோசனேதான். நீங்கள் அவளே ஏதோ ஒரு பணம் படைத்த கிழவனுக்கோ, முரடனுக்கோ, அல்லது பெண்ணுசை பிடித்து அலேகிறவனுக்கோ கல்யாணம் செய்து வைக்கப் போகிறீர்கள். தெரியும் எனக்கு. அதில் உங்களுக்கும் ஒருபங்கு பணம் கிடைக்குமல்லவா!" என்ருள் பொன்னி ஏளனமாக.

இதைக் கேட்டதும் சிவப்பிரகாசத்தின் கண்களில் கோபக் கனல் பறந்தது. அவர் ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே, "என்ன சொன்னுய்...! மரியாதையாக இந்த இடத்தை விட்டு வெளியே போய்விடு! என் கோபம் பொல்லாது. உடனே இவ்விடத்தை விட்டு வெளியேறு" என்ருர் படபடப்போடு.

பொன்னி சிரித்து விட்டு, "நீங்கள் என்னே என்ன செய்து விட முடியும்! வினைத் துடிப்பதால் நான் பயந்துவிட மாட்டேன்" என்ருள்.

பொன்னி சிறிதும் அச்சப்படாதவன் போல் பேசினுளே தவிர அவள் உள்ளத்தில் இயற்கையாகவே சிறிது பயம் இருக்கத் தானிருந்தது. வேதாவிற்காகப் போராட வந்த பொன்னிக்குச் சிவப்பிரகாசத்தின் இரக்கமற்ற, சுயநலமுள்ள, துராசை கொண்ட இருதயத்தைத் திருப்புவது கடினம் என்பது தெரிந்துதான் இருந்தது. நியாயத்தோடும் தர்மத்தோடும் போராடினுல் எத்தகைய கொடிய உள்ளத்தையும் திருப்பி விடலாம் என்ற தைரியமும் ஒருபுறம் அவளுக்கு இருந்தது. ஆகவே, அப்பொழுது பொறுமை தளர்ந்திருந்த சிவப்பிரகாசத்தினிடம் சமாதான நோக்கத்துடனேயே பேச நினைத்தாள். "நீங்கள் கொஞ்சம் பொறுமையோடு இருந்தால் நான் இங்கு எதற்காக வந்தேன் என்பதைச் சொல்வேன்" என்ருள்.



"வேண்டாம். நான் அதைக் கேட்க விரும்பவில்லே" என்ருர் சிவப்பிரகாசம் கோபம் தணியாதவராக.

"நீங்கள் கேட்க விரும்பவில்லேயா! அப்படியென்ருல் நீங்கள் பின்னுல் வருத்தப்படுவீர்கள். கட்டாயம் வருத்தப்படும்படியாய்த்தான் நேரும்" என்ருள் பொன்னி எச்சரிக்கை செய்பவள் போல். அவளுடைய கண்டிப்பான குரலும் வார்த்தைகளும் சிவப்பிரகாசத்தையே சிறிது திகைப்படையச் செய்தன.

"அது வேதாவைப் பற்றிய விஷயமோ!"

"ஆமாம்."

"அப்படியானுல் சொல்லு, கேட்போம்."

அந்தச் சமயத்தில் வேதாவிற்கும் டாக்டர் பரசுராமனுக்கும் உள்ள அந்தரங்கமான காதலேச் சிவப்பிரகாசத்தினிடம் சொல்லப் பொன்னி சிறிது தயங்கினுள். அதைச் சொல்வதில் அவளுக்குச் சிறிது கூச்சமாகவும் வெட்கமாகவும் கூட இருந்தது. இருந்தாலும் எப்படியோ ஆதியிலிருந்து வேதாவிற்கும் டாக்டருக்கு முள்ள தொடர்புகளேயெல்லாம் சொல்லி விட்டு, "இப்படி இருக்கும் போது எப்படி அவளே நீங்கள் இவ்விடத்திலிருந்து அழைத்துப் போக முடியும்!" என்று கேட்டாள்.

இதையெல்லாம் கேட்ட சிவப்பிரகாசம் வேறு எங்கோ பார்த்துக் கொண்டே கேலியாகச் சிரித்தார். பிறகு, "சுவாரஸ்யமான கதையாக இருக்கிறதே, இது! ஹ்ும். நீதான் இவர்கள் இரண்டு பேரையும் ஜோடி சேர்ப்பதற்குக் காரணமாக இருந்திருக்கிருய் போலிருக்கிறது. ஆனுல் இதை



யெல்லாம் மரகதமோ செங்கம்மாவோ தெரிந்து கொண்டால் உனக்கு எவ்வளவு ஆபத்து ஏற்படும், தெரியுமா!" என்று கேட்டார்.

"சந்தேகமில்லாமல் ஆபத்து ஏற்படலாம். ஆனால் எதற்கும் நான் பயப்படவில்லையே!" என்றாள் பொன்னி பளிச்சென்று.

"எனக்குத் தெரியும், நீ எதற்கும் பயப்பட மாட்டாய் என்று. உன்னைப் பார்த்தால் பயப்படக் கூடிய பெண்ணாகவும் எனக்குப் படவில்லை. நான் இதற்காகச் சந்தோஷப் படுகிறேன். உன்னைப்போல் தைரியமுள்ள ஒரு தோழி வேதாவிற்குக் கிடைத்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம்" என்றார் சிவப்பிரகாசம்.

"அப்படியென்றால் வேதா டாக்டரைக் கல்யாணம் செய்து கொள்வதில் உங்களுக்குப் பூரண திருப்திதானே!" என்றாள் பொன்னி துடிப்புடன்.

"எனக்கு அதில் இஷ்டமில்லை; சம்மதமில்லை இவ்வளவு காலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த என் பெண்ணை மறுபடியும் ஒரு கஷ்டமான நிலையில் வைக்க நான் பிரியப்படவில்லை. அந்த டாக்டரின் யோக்யதையைப் பற்றியோ குணத்தைப் பற்றியோ எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் அவன் பணக்காரப் பிள்ளையா!"

"பணத்தால் என்ன பிரயோஜனம்! டாக்டரைப் போலவும் வேதாவைப் போலவும் அந்தரங்கமான அன்பு கொண்ட இருவருக்குப் பணத்தைப் பற்றிய கவலை பெரிதாகுமா!" என்றாள் பொன்னி.

"தெரியும்! எனக்கும் தெரியும், காதலின் லட்சியம் தத்துவம் எல்லாம்! ஆனால் அதெல்லாம் கவைக்கு உதவாது. நான் அதை அனுமதிக்க மாட்டேன். பம்பாய், கல்கத்தா போன்ற இடங்களில் அவள் ஒரு கோடீசுவரனையே கல்யாணம் செய்து கொள்ளக் கூடிய மார்க்கம் உண்டு. அதனால் அவளுக்கு எல்லா விதமான சௌகர்யங்களும் உண்டு."

"ஆனால் வேதா அதையெல்லாம் விரும்பவில்லை. அவளுடைய ஆசையெல்லாம் டாக்டர் பரசுராமனைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்பது தான்" என்று உறுதியான தொனியில் சொன்னாள் பொன்னி.

"அவள் இப்பொழுது அப்படி நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் நீ கொஞ்சம் பொறுத்துப் பார்த்தால் தெரியும்" என்று சிவப்பிரகாசம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அறைக்கு வெளியே யாரோ வருவதுபோல் சப்தம் கேட்டது.

"யார் அது...!" என்று உரத்த குரலில் சிவப்பிரகாசம் கேட்டு விட்டு, "சரி! நீ எங்காவது மறைந்து கொள், சீக்கிரமாக. ஒருவேளை மரகதம் வந்தாலும் வருவாள். இந்தச் சமயத்தில் நீ இங்கிருப்பதை அவள் தெரிந்து கொள்வதை நான் விரும்பவில்லை" என்றார் சிவப்பிரகாசம்.

அவர் சொல்லுவதற்கு முன்னாலேயே பொன்னி அந்த அறையில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு பழைய பீரோவிற்குப் பின்னால் போய் மறைந்து கொண்டாள். அதற்குக் காரணம் மரகதம் வரும்போது அவள், தானே அங்கு இருக்க விரும்பாததுதான்.

அடுத்த கணம், "நான்தான்—மரகதம்" என்ற குரலும் அதைத் தொடர்ந்தாற்போல் அறைக் கதவு திறக்கப்படும் சப்தமும் பீரோவிற்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த பொன்னியின் செவிகளில் விழுந்தது. (தொடரும்)

# தங்கசாமியின் தடுமாற்றம்

அக்ஷயம்

## காட்சி—1

**மங்களம் :**—ரேஷன் கடைக்குப் போனால் இத்தனை நாழிகையா! எழுந்திருந்ததும் எழுந்திருக்காததுமாகக் கையில் கார்டை எடுத்துக் கொண்டு புறப்பட்டேளே! வழியிலே யாராவது பேசப் பிடித்துக் கொண்டு விட்டார்களோ! திரும்பி வருவதற்கு ஏன் இத்தனை நாழிகை!

**தங்கசாமி :**—மூச்சு விடப் பொழுதில்லை; பேசப் பொழுது எங்கே இருக்கு! எனக்கு முன்னாடித் தான் எண்பது பேர் 'க்யூ'விலே நிற்கிறார்களே! வாங்கிக் கொண்டுதானே வந்தாகணும்!

**மங்களம் :**—அது போகட்டும். அதிகப்படி சர்க்கரை கேட்டுப் பாருங்கோன்னு சொன்னேனே, கேட்டேளோ!

**தங்கசாமி :**—'ரூல்'னு 'ரூல்'தான்! உனக்கு ஒரு 'ரூல்' உங்க அப்பாவுக்கு ஒரு 'ரூல்'னு சட்டம் போடமாட்டா. நீ உன் பொறந்தகத்துக்கு அனுப்பணுங்கிறதுக்காக அதிகப்படியாகக் கொடுத்து விடுவாளோ! உன் மூளையே மூளை!

**மங்களம் :**—என் மூளைதான் இருக்கே! அரை வீசைச் சர்க்கரை அதிகமாகக் கேட்டு வாங்கிக் கொண்டு வர வழி தெரியலை, நீங்களும் ஒரு ஆண் பிள்ளை மாதிரி!

**தங்கசாமி :**—ஏண்டி! ஆண்பிள்ளை மாதிரிங்கறயே, என்னைப் பார்த்தால் உனக்கு ஆண் பிள்ளையாகத் தோணவில்லையோ!

**மங்களம் :**—போதுமே, பரிகாசப் பேச்சு! இன்னிக்கு டி. யூ. ஸி. எஸ் ஸிலே காப்பிக் கொட்டை கொடுக்கிறானும். விலையும் சலுமாம். போய் வாங்கிக் கொண்டு வாங்கோ. உங்கள் சிநேகிதர் குருமூர்த்தியின் கார்டையும் வாங்கிக் கொண்டு போனேன்னா இன்னும் கொஞ்சம் கூடக் கிடைக்கும்.

**தங்கசாமி :**—அப்பப்பா! தினம் பொழுது விடிந்தால் பொழுது போனால் இதுதான் வேலை. சர்க்கரை வேணும். காப்பிக் கொட்டை இல்லை. அமாவாசைக்கு இட்டிலி வார்க்க அரிசி இல்லை. எதற்கெடுத்தாலும் இல்லைப் பாட்டுத்தானா!

**மங்களம் :**—நான் என்ன செய்ய! ஆறு குழந்தைகளும் அகமுடையாளும் இருக்கும் இந்தச் சின்னக் குடும்பத்தையே நடத்தத் தெரியாத நீங்கள், அப்பா, அம்மா, அண்ணன் தம்பி, மாமனார் - மாமியார்னு இன்னும் பெரிய குடும்பமாக இருந்து விட்டால் எப்படித்தான் குடித்தனம் நடத்திக் குப்பை கொட்டுவேளோ! —இந்தாருங்கோ, பை! சீக்கிரம் போய்க் காப்பிக் கொட்டையை வாங்கிக்கொண்டு வந்துசேருங்கோ!

**தங்கசாமி :**— இப்பத்தான் கால் கடுக்கக் 'க்யூ'விலே போய் நின்னுட்டு வந்திருக்கேன். இன்னொரு தடவை போய் இரண்டு மணி 'க்யூ'விலே நிற்க என்றால் ஆகாது. வேண்டுமானால் நீ போய்விட்டு வா.

**மங்களம் :**—இது ஒண்ணுதான் குறைச்சல்! ஏதடா, ஒரு பொம்மனாட்டியைக் கடை கண்ணிக்குப் போகச் சொல்றமேன்னு உங்களுக்கு வெட்கமாயில்லை!

**தங்கசாமி :**—இதிலே வெட்கம் என்னடி! எத்தனையோ பொம்மனாட்டிகள் போகலையோ! போனால் நீ என்ன தேஞ்சா போயிடுவே!

**மங்களம் :**—இதற்குத்தான் எங்கள் அப்பா என்னை உங்களுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாராக்கும். அவர் இருக்கும் அந்தஸ்துக்கு.....

**தங்கசாமி :**—என் பிராணனை வாங்கன்னு என் தலையிலே உன்னைக் கட்டினார்!

**சேகர் (பிரவேசித்து) :**—அப்பா! அப்பா! இன்னிக்கு ஜவுளிக் கடையிலே துணி வந்திருக்காம். அங்கே கஜம் மல்லும் இரண்டு கஜம் லாங்கிளாத்தும் கொடுக்கிறார்களாம்.

**தங்கசாமி :**—கொடுத்தால் கொடுக்கட்டுமே!

**சேகர் :**—எனக்குச் சட்டையே இல்லை, அப்பா!

**தங்கசாமி :**—இல்லைன்னா என்னை என்ன செய்யச் சொல்றே!

**சேகர் :**—சட்டைக்குத் துணி வாங்கிக் கொடுங்கோ, அப்பா!



**தங்கசாமி :**—சட்டையும் ஆச்சு, கிட்டையும் ஆச்சு! போடா!

**சேகர் :**—அப்பா! அப்பா! அப்பா!

**தங்கசாமி :**—என்னடா அப்பா, அப்பா! பேசாமல் வாயை மூடிக் கொண்டு போகிறாயா, உதை வேணுமா!

**சேகர் :**—ஆமாம், எனக்குச் சட்டையே இல்லைன்னு சொல்றேன்......

**தங்கசாமி :**—டேய், அதுதான் ஒரு தடவை சொல்லி விட்டேனே, இல்லையோ! எதற்கடா திருப்பித் திருப்பிப் பிராணனை வாங்குகிறாய்! (முதுகில் ஓங்கி அடிக்கிறார்).



**மங்களம் :**—குழந்தை கேட்டால் வாங்கிக் கொடுப்பார்களா, அடிப்பார்களா!

**தங்கசாமி :**—உன் பிள்ளைக்குப் பரிந்து கொண்டு வந்து விட்டாயாக்கும். போடி, கிடக்கு!

**மங்களம் :**-போகாமல் நான் என்ன இங்கேயா நிற்கப் போகிறேன்! இரண்டு குழந்தைகளை வைத்துச் சம்ரக்ஷிக்கத் தெரியாதவா அநாவசி

யமாகக் கல்யாணம் பண்ணிண்டிருக்கக் கூடாது.



**தங்கசாமி** :— அம்மா, பரதேவதை! உன் உபதேசம் தான் குறைச்சல். இப்பத்தான் என்ன குடி முழுகிப் போச்சு! மகாராஜியா உன் குழந்தைகளை அழைச்சிண்டு பொறந்தாத்திலே போய் ஆனந்தமாயிரு. நான் 'சிவா, ராமா, கிருஷ்ணா'ன்னு சந்நியாசம் வாங்கிக் கொண்டு ஏதாவது ஒரு மடத்துக்குப் போய்ச் சேருகிறேன்.

**மங்களம்** :—பேஷா, தாராளமாய்ப் போங்கள். வேண்டாம் என்று கையைப் பிடித்து இழுத்து நிறுத்திவைக்க இங்கே யார் காத்துக் கொண்டிருக்கிறார்கள்!

**தங்கசாமி**:—இவ்வளவு தூரத்துக்கு வந்துடுத்தா! இந்த வீட்டிலே இனிமேல் காலடி எடுத்து வைத்தால் என்னை ஏன் என்று கேள்.

**மங்களம்** :—எடுத்ததற்கெல்லாம் இப்படிக் கோபித்துக் கொண்டால் ஒருத்தி என்னதான் செய்வாளாம்!

**தங்கசாமி** :—போதும், போதும்! உன்னோடு சம்சாரம் நடத்திக் குப்பைக்கொட்டினது போதும். முடியாது, முடியாது. இனிமேல் உன்னோடு வாழ முடியாது. முடியாது என்றால் முடியாதுதான்!

**மங்களம்** :—வேண்டாம், வேண்டாம்; வேண்டவே வேண்டாம். *(தங்கசாமி 'தட தட'வென்று நாற்காலியை வேகமாக நகர்த்திக் கொண்டு எழுந்திருக்கிறான். அதே சமயம் மூன்று நான்கு வயதுச் சின்னக் குழந்தை வீறிட்டு அழுகிறது.)*

**சுசீலா** *(அழும் பாப்பாவைத் தூக்கிக்கொண்டு வந்து)*:—அம்மா, படி தாண்டும் பொழுது பாப்பா தடுக்கி விழுந்து விட்டாள். காலிலே கொஞ்சம் சிராய்த்துக் கூட விட்டது.

**தங்கசாமி** *(பதை பதைத்து ஓடி வந்து)*:—எங்கேயடி காயம்! த்ஸு த்ஸு, அடாடா, ரத்தம் கூட வந்து விட்டதே!—மங்களம், உதிய மரமாட்டமா நிற்கிறயே! போய்க் கொஞ்சம் தேங்காய் எண்ணெயும் துணியும் கொண்டு வாயேன்!

**மங்களம்** :—எல்லாவற்றையும் துறந்து சந்நியாசம் எடுத்துக் கொள்ளப் போகிறவருக்கு இந்தப் பாசம் எல்லாம் எதற்கோ!

**தங்கசாமி** *(அதட்டி)* :— உன் வம்புப் பேச்சுக்கு இதுவா சமயம்! போடி, போய்க் கொஞ்சம் தேங்கா யெண்ணெய் கொண்டு வாடி—அழாதே, பாப்பா! அழாதே! இதோ ஊவா ஆறிப் போயிடும். *(குழந்தை விசிக்கிறது.)*—இந்தாடி, குழந்தையை வாங்கிக் கொள்ளு.

**மங்களம்** *(வரும் சிரிப்பை அடக்கிக் கொண்டு)* :—சித்தார்த்தர் இந்தமாதிரிக் கஷ்டங்களை யெல்லாம் பார்த்து விட்டுத்தான் துறவு பூண்டாராம். நீங்களும்......



**தங்கசாமி** :—ஆனால் ஒன்று; யசோதரா உன்னைப் போல அவருக்குத் துறவியாகும் படி உபதேசம் செய்யவில்லை.

**மங்களம்** :—நேரே இருந்து பார்த்தவரைப் போலப் பேசுகிறீர்களே! அவள் உபதேசம் செய்தாளா, இல்லையா என்பது உங்களுக்கு என்ன தெரியும்!

**தங்கசாமி**:—போதுமடி பரிகாசப் பேச்சு! ஆபீசுக்கு நேரமாகிவிடப் போகிறது. சீக்கிரம் சமை. இதோ நான் குளித்து விட்டு வந்து விடுகிறேன்.



## காட்சி—2

**சுசீலா** :—அம்மா! இரண்டு நாளாக அப்பா வீட்டுப் பக்கமே வரக் காணோமே, ஏன், அம்மா!

**சேஷன்** :—அம்மா, அப்பா ஆபீசுக்கும் போக வில்லையாம். லீவு லெட்டர் கூடக் கொடுக்க வில்லையாம்.

**மங்களம்** :—என்ன கர்மமோ! இந்த மாதிரிப் பைத்தியத்தையும் பித்தையும் கட்டிக் கொண்டு மாரடிக்க வேண்டும் என்று என் தலையில் எழுதியிருக்கிறது.

**சுசீலா** :—யாரை அம்மா பைத்தியம், பித்துங்கிறே!

**மங்களம்** *(ஆத்திரத்தில்)* :—உன்னைத்தான்!

**சுசீலா**:—என்னையா! உம் உம் [அழ ஆரம்பிக்கிறாள்.]

**மங்களம்**:—அசடே, உன்னைச் சொல்லுவேனாடி! ஆத்திரத்திலே ஏதோ வாய் தவறி வந்துடுத்து. எல்லாம் உன் அப்பாவைத்தான் சொன்னேன். யாராவது பேசப் பிடித்துக் கொண்டு விட்டால் உன் அப்பாவுக்கு ஒரு நாள் இல்லை; இரண்டு நாள் இல்லை. சாப்பாட்டு நினைவே வராது. யாராவது சீட்டாடக் கிடைத்து விட்டால் ஊர், உலகம், வீடு, வாசல் எல்லாத்தையுமே மறந்துடுவார். யார் வீட்டிலே சீட்டுக் கச்சேரியோ!—ஏண்டா சேஷு, கிட்டுச்சாமி மாமா வீட்டிலே பார்த்தயோ!

**சேஷன்**:—கிட்டுச்சாமி மாமா என்ன! ஊரிலே ஒரு வீடு கூடப் பாக்கி வைக்காமல் தேடிப் பார்த்து விட்டேன். கிடைக்கவில்லை.

**கப்பு** *(பிரவேசித்து)* :—ஏண்டா சேஷு, என்னடா கிடைக்கவில்லை!

**சேஷன்**:—எங்கள் அப்பாவை இரண்டு நாளாகக் காணோமடா!

**கப்பு**:—என்னடா வேடிக்கையா பண்றே!—ஏன் மாமி, சேஷு சொல்லுவது உண்மை தானா!

**மங்களம்**:—உண்மை இல்லாமல் என்ன பொய்யா! ஊர் முழுவதும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தாச்சு! அகப்பட்டால்தானே!

**கப்பு**:—அவர் என்ன திருகு ஊசியா, கடுக்கனா சல்லடை போட்டுச் சலிக்கத் தேடி எடுப்பதற்கு! தேடுகிறபடி தேடினால்தானே அகப்படுவார், மாமி!

**சுசீலா**:—இவன் பெரிய துப்பறியும் புலி. தேடுகிறபடி தேடினால்தான் அகப்படுவாராம். போடா, மக்கு!

**கப்பு**:—நானா மக்கு! நீதான் மக்கு! சுசீலா, இன்னொரு விஷயம் தெரியுமோ, இல்லையோ! மக்கு ரொம்ப உபயோகமான பொருள். ஓட்டை மேஜை ஓட்டை நாற்காலி முதலியவைகளை யெல்லாம் மக்கு வச்சு ஓட்டை தெரியாமல் அடைச்சு வார்னிஷ் பூசி விட்டால் 'பள பள'ன்னு புதிசா ஆகி விடும். மக்கு ஒண்ணும் மட்டமான பொருள் இல்லை. தெரிஞ்சுக்கோ!

**சுசீலா**:—வெகண்டைப் பேச்சுக்கு மட்டும் ஒரு குறைச்சல் இல்லை. காரியம்னு வந்தால் களைக்குக்கூட உதவமாட்டாய்.

**சேஷன்**:—உனக்கு ஏண்டி கப்புவைக் கண்டால் பற்றிக் கொண்டு வருகிறது. இந்தத் தெருவிலே 'என் மாதிரி துப்பறியும் புலி கிடையவே கிடையாது'ன்னு கப்பு சொல்லிக் கொண்டிருக்கிறான். தெரியுமோ, இல்லையோ!



**சுசீலா**:—உன் சினேகிதனுக்குப் பரிந்து கொண்டு பேச வந்து விட்டாயோ! போடா, போக்கிடம் கெட்ட கழுதை!

**சேஷன்** :— நான் ஒண்ணும் பரிந்து கொண்டு பேச வரவில்லே. கப்புவைப் பற்றி உனக்குத் தெரியாது. அடுத்தாத்து அரிவாள்மணை கெட்டுப் போனபொழுது கப்புத்தான் தேடிக் கொடுத்தான். கோடிவீட்டுக் குப்புப் பாட்டி கோணி ஊசியைக் கெட்டுப் போக்கினளே, தெரியுமா! அதைக் கண்டு பிடித்துக் கொடுத்ததும் இந்தக் கப்புத்தான். எதிர்வீட்டு எருமைக் கன்றுக்குட்டி கெட்டுப் போன பொழுது இந்தக் கப்பு மட்டும் இல்லேன்னு அது போனது போனதுதான்! கப்புவைச் சாதாரணமானவன்னு நினைக்காதே. [சுசீலாவும் சேஷனும் சிரிக்கிறார்கள்.]

**மங்களம்**:—என்னடா பரிகாசம்! கப்புவுக்கு இருக்கிற துப்புக் கூட உங்களுக்கு இல்லையேடா!

**சேஷன்**:—அதனால்தானே அம்மா நாங்கள் கப்புவுக்குத் துப்பறியும் புலின்னு பேர் வச்சிருக்கோம்!

**கப்பு**:—டேய், இரண்டு பேரும் சேர்ந்து என்னைக் கோட்டாவா பண்ணுகிறீர்கள்! இருங்கள், சொல்லுகிறேன் உங்களுக்கு! கெட்டுப்போன உங்கள் அப்பாவை நான் கண்டு பிடித்துத் தரவில்லேன்னு என் பேரு கப்பு இல்லே.

**சுசீலா**:—அதுதான் ஆண் பிள்ளைக்கு அழகு!

**கப்பு**:—ஏன் மாமி! கடிகாரம் நின்று விட்டாற் போலிருக்கிறதே!

**சேஷன்**:—நின்றிருப்பது தெரிகிறதோ, இல்லையோ! அப்புறம் கேட்பானேன்!

**கப்பு**:—நான் உன்னைக் கேட்கலேயடா. ஏன் மாமி, கடிகாரத்துக்கு யார் சாவி கொடுக்கிற வழக்கம்!

**மங்களம்** :—மாமாதான். எதற்குக் கேட்கிறாய்!

**கப்பு** :—காரணம் இல்லாமல் கேட்பேனா! என் கேள்விக்கு 'டக் டக்' என்று பதில் சொல்லுங்கள்.

**மங்களம்** :—சரி, கேள்.

**கப்பு** :—என்ன கிழமைகளில் சாவி கொடுப்பார்!

**மங்களம்** :—செவ்வாய்க் கிழமைகளில்.

**கப்பு** :—காலையிலா, மாலையிலா!

**மங்களம்** :—காலையில்.

**சேஷன்** :—இல்லை, மாலையில்.



**சுசீலா** :—இரண்டு போ சொல்லுவதும் தப்பு. மத்தியானம்தான் கொடுப்பார்.

**கப்பு** :—சுசீலா! என்னை அசடாக்கிவிடலாம் என்று எண்ணாதே! மத்தியானம் உங்கள் அப்பா ஆபீஸிலே இருப்பாரா, ஆத்திலே உட்கார்ந்து கொண்டு சாவி கொடுப்பாரோ!—ஏன் மாமி, எத்தனை சுற்றுச்சாவி கொடுப்பது வழக்கம்!

**மங்களம்**:—எத்தனை சுற்றோ, எனக்குத் தெரியாது.

**சேஷன்** :—பதினாறு சுற்று.

**சுசீலா** :—பதினேழு சுற்று.

**கப்பு** :—பதினாறுக்கும் பதினேழுக்கும் அவ்வளவு ஒண்ணும் பெரிய வித்தியாசம் இல்லை.—சரி, இன்னிக்கு என்ன கிழமை!

**சுசீலா** :—ஏண்டா, உனக்குக் கிழமை கூடவா தெரியாது!

**கப்பு** :—கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுகிறாயா, குறுக்கே குறுக்கே கேள்விகள் கேட்கிறாயா!

**சுசீலா** :—இல்லை, அப்பா! இல்லை! இன்னிக்கு வந்து......புதன் கிழமை.

**கப்பு** :—ஆல் ரைட்! உங்கள் அப்பா செவ்வாய்க் கிழமை அன்று வீட்டில் இருந்திருந்தால் கடிகாரத்துக்குக் கட்டாயம் சாவி கொடுத்திருப்பார். கடிகாரம் நின்று போய்விட்டதனால் அவர் செவ்வாய்க் கிழமை வீட்டில் இல்லை என்று ஆகிறது.—ஏன் மாமி, ஆகவே, அவர் திங்கள் கிழமை வீட்டை விட்டுப் போனவர்தானே!

**மங்களம்** :—ஆமாம். ஆமாம். திங்கட்கிழமை காலையில் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குப் போனவர் அப்புறம் திரும்பி வரவே இல்லை.

**சேஷன்** :—சபாஷ், கப்பு! அவர் என்றைக்குப் போயிருக்க வேண்டும் என்பதைக் கன கச்சிதமாகக் கண்டு பிடித்துச் சொல்லி விட்டாயே!

**சுசீலா** :—ஒரே கேள்வியில் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயத்துக்கு ஊரை வளைத்துப் பேச வேண்டுமாக்கும்!

**கப்பு** :—அதற்கடுத்தபடியாக இப்பொழுது நம் முன்னே நிற்கும் கேள்வி அவர் எதற்காக வீட்டை விட்டுப் போயிருக்க வேண்டும் என்பதுதான்.

**சுசீலா** :—நிற்கிற கேள்வியா! உட்கார்ந்திருக்கிற கேள்வி இல்லையோ!

**கப்பு** :—சுசீலா, உன் பரிகாசம் அப்புறம் இருக்கட்டும்—மாமி, அவர் ஆபீஸிலிருந்து ஒன்றும் சொல்லி யனுப்பவில்லையே!

**சுசீலா** :—சொல்லி யனுப்பி யிருந்தால் தான் நீ துப்புத் துலக்க வேண்டிய அவசியமே ஏற்பட்டிராதே!

**கப்பு** :—இது யாருடைய மேஜை!

**சேஷன்** :— அப்பாவின் மேஜைதான்!

**கப்பு** :—இதன் சாவி இருக்கிறதா!

**மங்களம்** —இதன் சாவியை அவர் எங்களிடம் கொடுப்பதில்லை.

**கப்பு** : — கொடுப்பதில்லையா! அப்படியானால் இந்த மேஜைப் பூட்டை உடைத்தாக வேண்டும்.

**சுசீலா** :—உடைப்பானேன்!



**கப்பு :**— குறுக்கே குறுக்கே கோணல் கேள்விகள் கேட்காதே என்று உனக்கு நூறு தடவை சொல்லிவிட்டேன். அப்புறம் எனக்குப் பொல்லாத கோபம் வரும்.

**கிலா :**—அது சரி, கப்பு! உனக்குக் கண் இருக்கிறதா, இல்லையா!

**கப்பு :**—எதற்காகக் கேட்கிறாய்!

**கிலா :**—மேஜையிலேயேதான் சாவிக் கொத்துத் தொங்கிக் கொண்டிருக்கிறதே! மேஜைக்கு இவ்வளவு கிட்ட உட்கார்ந்திருந்தும் சாவி இருப்பது உன் கண்ணுக்குத் தெரியவில்லையே என்பதற்காகத்தான்!

**கப்பு :**—சரி! ஏதோ கவனமாயிருந்து விட்டேன். எப்போ சாவி மேஜை டிராயரிலேயே தொங்கிக்கொண்டிருக்கிறதோ அப்போ உங்கள் அப்பா கட்டாயம் அகப்பட்டு விடுவார்.

**சேஷு :**—அகப்பட்டு விடுவாரா! ஒருவேளை எங்க அப்பா மேஜைக்குள்ளேயே படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பார் என்கிற எண்ணமோ!

**கப்பு :**—ஏய், சும்மா இருடா! [மேஜையைத் திறக்கிறான். காகிதங்கள் சல சலக்கின்றன]-அட, ஒன்றும் இல்லையே!

**கிலா :**—இத்தனை காகிதக் குப்பைகள் இருக்கு. ஒன்றும் இல்லைங்கிறயே! உன் கண்கள்...... யாராவது நல்ல கண் டாக்டரிடம் போய் முதலில் கண்ணுக்கு நல்ல கண்ணாடியாகப் போட்டுக் கொண்டு வா. அப்புறம் உன் துப்பறியும் வேலையைக் கவனிக்கலாம்.

**கப்பு :**—கிலா, சும்மா இருக்கிறாயா, உதை வேணுமா!—மாமி, இந்த அலமாரியைத் திறந்து பார்க்கலாமா!

**மங்களம் :**—பேஷாகத் திறந்து பார்!

**சேஷு :**—எதற்காக!

**கிலா :**—அப்பா அலமாரிக்குள் உட்கார்ந்திருக்கிறாரோ என்று பார்க்கத்தான்!

**கப்பு :**—துப்பறிவது என்பது சாமான்யப்பட்ட காரியம் இல்லை. சில விஷயங்களுடன் சம்பந்தம் இருக்கும். சிலவற்றுடன் சம்பந்தம் இருக்காது. இதற்கெல்லாம் காரண காரியம் கேட்டுக் கொண்டிருந்தால் துப்பறிந்தாற் போலத்தான்!

**சேஷு :**—சரி, பேஷாகப் பார். இதோ ஒரு எலி வளை இருக்கிறது. அதோ ஒரு எறும்பு வளை இருக்கிறது. எல்லாவற்றையும் நன்றாகத் தேடிப் பார். யாரும் வேண்டாம் என்று தடுக்கவில்லை.

**கப்பு** [அலமாரியைத் திறந்து சாத்துகிறான்.] :— என்ன ஒரு துப்பும் கிடைக்க மாட்டேன் என்கிறதே! நமக்குத்தான் மூளைக் கோளாறு!

**சேஷு :**—சேச்சே! அப்படி இராது.

**கப்பு** [தலையில் பென்சிலால் இரண்டு தட்டுத் தட்டிக்கொண்டு] :—ஏண்டா சேஷு! அதோ மூலையில் சுற்றி யிருப்பது உங்கள் அப்பாவின் படுக்கைதானேடா!

**சேஷு :**—ஆமாம்.

**கப்பு :**—அவர் படுக்கையைத் தினம் சுற்றி வைப்பது யார்!

**சேஷு :**—எதற்காகக் கேட்கிறாய்! ஒருவேளை அப்பா ஞாபக மறதியாகத் தன்னையும் சேர்த்துப் படுக்கையோடு படுக்கையாகச் சுருட்டிக் கொண்டிருப்பாரோ என்பதற்காகத் தானே!

**கப்பு :**—இல்லைடா!

**சேஷு :**—என்ன சொல்லேண்டா!

**கப்பு :**—அறை இருட்டாக இருக்கிறது. நீ போய் 'டார்ச்'சைக்கொண்டு வாயேன் [சில விநாடிகள் மௌனம்] ஏய் சேஷு டார்ச் வேண்டாமடா. கண்டு பிடித்து விட்டேன்!

**சேஷு** [உரக்க] :— அம்மா! அப்பா அகப்பட்டு விட்டாராம்!

**மங்களம், கிலா** [இருவரும்] :— அகப்பட்டு விட்டாரா! எங்கே!.

**கப்பு :**—இதோ பார்த்தீர்களா, புத்தகத்தை!

**மங்களம் :**—பூ! புத்தகம்தானா!

**கப்பு :**—இது என்ன புத்தகம் தெரியுமோ!

**மங்களம் :**—என்ன புத்தகம்!

**கப்பு :**—புத்தர் துறவு. மாமாவும் புத்தரைப் போலத் துறவு பூணப்போயிருக்க வேண்டும்.

**சேஷு, கிலா** [இருவரும்] :— என்ன, துறவு பூணவா!

**கப்பு :**—ஆமாம்.

**மங்களம்** [வருத்தத்துடன்] :— வீட்டை விட்டுப் புறப்பட்ட அன்றைக்கே அலுத்துச் சலித்துக் கொண்டுதான் போனார். கடைசியில் அப்படியே செய்து விட்டாரோ, என்னவோ!

**கப்பு** [புத்தகத்தைச் சட சட வென்று பிரிக்கிறான். காகிதம் விழுகிறது] :— இதோ பார்த்தீர்களா! நான் சொன்னது எவ்வளவு 'கரெக்ட்' பாருங்கள். சந்நியாசம் எடுத்துக் கொள்ளப் போவதாகக் கடிதமே எழுதி வைத்துவிட்டுப் போய் விட்டார்!

**மங்களம்:**—அட கிரஹசாரமே!

**கிலா:**—கப்பு, நீ கெட்டிக்காரன் தாண்டா!

**சேஷு:**—உனக்குத் துப்பறியும் புலின்னு பட்டம் கொடுத்து விட வேண்டியதுதான்!

## காட்சி—3

**தங்கசாமி:**—நாராயணா, நாராயணா, நாராயணா!

**ராமாநுஜம்:**—வா, அப்பா! வா! ஏண்டா பழி, இதென்னடா வேஷம்!

**தங்க:**—நான் சந்நியாசம் எடுத்துக் கொள்ளுவதாகத் தீர்மானித்து விட்டேண்டா!

**ராமா:**—சந்நியாசம் எடுத்துக் கொள்ளுவதாகவா! பெண்டாட்டி கிட்ட ஏதாவது தகராறோ!

**தங்க:**—இல்லைடா, இந்தக் காலத்திலே குடும்பம் நடத்துவது இருக்கே, இது ஒரு பெரிய சன்னியாசப் போக்கு! எதற்கெடுத்தாலும் இல்லையாட்டு. வீட்டிலே போனால் அதை வாங்கிக் கொண்டு வா, இதை வாங்கிக் கொண்டு வா என்று





கழுத்தை அறுக்கிறான். வெளியே போனால் இன்னிக்கு வருகிறது, நாளைக்கு வருகிறதுன்னு பல்லவி பாடுகிறான்கள். பார்த்தேன், ஒரு விதமாக இந்தக் குடும்ப வாழ்வுக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டுக் கிருஷ்ணா, ராமா, கோவிந்தான்னு சந்நியாசம் எடுத்துக் கொள்ளுவது தான் சரியாகப் பட்டது.

ராமு:—சந்நியாசம் எடுத்துண்டா மட்டும் சாமான் கவலை தீர்ந்து போயிடும் என்கிற எண்ணமோ!

தங்க:—ஆமாம், உப்பு இருக்கா, புளி இருக்கா என்கிற கவலை கிடையாது பாரு! யாரோ பிக்ஷைக்குக் கூப்பிட்டுச் சாப்பாடு போடுகிறான். 'சத்ரா போஜனம், மடா நித்ரா' என்பார்களே, அதுபோலத் தின்னை கண்ட இடத்திலே—இல்லே, இல்லே, மடம் கண்ட இடத்திலே தூங்கலாம்.

ராமு:—இந்தக் காலத்திலே சந்நியாசிக்கு எவன் அப்பா சோறு போடுகிறான்! அவன் அவன் வயிறு வளர்ப்பதற்கே ஆலாய்ப் பறக்கும் பொழுது, சந்நியாசியாவது, சாமியாராவது! எத்தனையோ சாமியார்கள் இந்தச் சாப்பாட்டுக் கஷ்டத்தைப் பார்த்து விட்டு, மறுபடியும் சம்சாரம் நடத்தவே போய் விட்டதாகக் கூடக் கேள்வி. குடியும் குடித்தனமுமா இருக்கிறதை விட்டு விட்டு...

தங்க:—நான் சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போவதாக, அவளுக்குக் கடிதம் எழுதி வைத்து விட்டு வந்து விட்டேன், அப்பா! இனி முன் வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது. கட்டாயம் சந்நியாசம் வாங்கிக் கொண்டுதான் ஆக வேண்டும்.

ராமு:—சரி, அப்புறம் உன் இஷ்டம். இதை விட நான் என்ன சொல்ல முடியும்!

[இதற்குள் வாசலில் ஒரு குழந்தை கீழேவிழுந்து அழுகிறது.]

தங்க:—டேய் ராமு, யாரோ குழந்தை கீழே விழுந்து விட்டதடா! யாராத்துக் குழந்தையடா! காயம்—கீயம் பட்டு விட்டதோ, பாரு!

ராமு [வெளியில் சென்று பார்த்து விட்டு]:—இல்லே, லேசாகச் சிராய்த்திருக்கிறதாம்.

தங்க:—த்ஸொ, த்ஸொ! நான் புறப்பட்டு வந்த அன்னிக்கு இப்படித்தான் என் கடைசிக் குழந்தை பேபி யில்லே, கீழே விழுந்து சிராய்த்துக் கொண்டு விட்டது. இப்பொழுது காயம் எப்படி இருக்கிறதோ! டாக்டரிடம் கொண்டு போய்க் காட்டினாளோ இல்லையோ, தெரியாது. பணத்துக்கு என்ன செய்தாளோ, அது வேறு கவலையாக இருக்கிறது!

ராமு:—பேஷ்! நல்ல சந்நியாசம்! இவ்வளவு பாசத்தையும் கவலையையும் வைத்துக் கொண்டுதான் நீ சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போகிறாயோ!

தங்க:—எல்லாம் சந்நியாசம் வாங்கிக் கொண்டு விட்டால் தானாகத் தீர்ந்துவிடும்.

ராமு:—நான் ஒன்று சொல்லுகிறேன், கேள். உன் குடும்பம் கஷ்டப்படாமல் ஜீவனம் நடத்தக்கூடிய அளவுக்குப் பணம் சேர்த்து வைத்துவிட்டு நீ சந்நியாசம் எடுத்துக்கொள்ளு. அப்பொழுதுதான் இந்தக் கவலையெல்லாம் உன்னைப் பாதிக்காது.

தங்க:—நான் பணம் சேர்த்துவைத்த பிறகு தான் சந்நியாசம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்றால் இந்த ஜன்மாவும் போதாது; அடுத்த ஜன்மாவும் போதாது. அவள் அப்பா கொஞ்சம் பசையுள்ளவர். அதனால்தான் அவள் கொஞ்சம் துள்ளுகிறாள்......

ராமு:—பார்த்தியா, பார்த்தியா! வீட்டிலே சண்டை போட்டுக் கொண்டுதான் வந்திருக்கிறாய் என்று வெட்ட வெளிச்சமாகத் தெரிஞ்சு போச்சு!

தங்க:—குடும்பம்னு ஒண்ணு இருந்தால் சண்டை இல்லாமல் இருக்குமா!

ராமு:—சண்டை போட்டுக்கொண்டு சந்நியாசம் வாங்கிக் கொண்டவர்கள் எத்தனையோ பேர் ரொம்ப ரொம்ப சிரமப் படுகிறார்கள். நான் சொல்லுவதைக் கேளு. ஊருக்குப் போய்க் குடும்பத்தை நடத்து. பக்கத்து வீட்டுக் குழந்தை அழுதாலே பரிதவிக்கும் உனக்கும் சந்நியாசத்துக்கும் தோதுப்படாது.

தங்க:—நீ சொல்லுவது வாஸ்தவம்தான். முன் வைத்த காலைப் பின் வைத்தால் அவள் என்ன நினைத்துக் கொள்ளுவாள்!

ராமு:—நினைப்பதற்கு என்ன இருக்கிறது! பெண்டாட்டியைப் பிரிந்திருக்க முடியவில்லை. திரும்பி வந்து விட்டான்னு நினைப்பாள்.

தங்க:—டேய், ராமு! நீயே பரிகாசம் செய்ய ஆரம்பித்து விட்டால்......

ராமு:—அசடு! கவலைப்படாதே! நானும் உன்னோடு வந்து ஒரு விதமாக ஒழுங்கு படுத்தி விட்டு வருகிறேன். இனிமேல் இந்த மாதிரி, யோசிக்காமல் அசட்டுப் பிசட்டுன்னு ஒரு காரியம் செய்து வைக்காதே!

தங்க:—உன்னைப்போல ஒரு சிநேகிதன் இருக்கும் பொழுது எனக்கு என்னடா கவலை!

### காட்சி—4

ராமு:—டேய், சேஷா! அப்பா இருக்கிறாரடா!

சேஷன்:— வாங்கோ, மாமா! வாங்கோ! அப்பா ஊரைவிட்டுப் போய் அஞ்சு நாளாகிறது.

ராமு:—எங்கே போயிருக்கிறார்!

சேஷன்:—யார் கண்டார்கள்!

ராமு:—என்னடா இப்படிப் பேசறே! விஷயத்தைச் சொல்லுடா!

சேஷன்:—அவர் சந்நியாசம் வாங்கிக் கொள்ளப் போயிருக்கிறாராம்.

ராமு:—என்ன!

மங்களம்:—சேஷா! அந்தக் கடிதாசியை எடுத்து மாமாவுக்குக் காட்டு!



ஜெயட்லாக்:—உங்களுக்கு ஒழிந்த வேளையில், அர்ஜண்டாய்ப் போகவேண்டிய 'பைல்' எல்லாத்தையும் என்னிடம் அனுப்பி வையுங்கள்!

**சேஷன் :**—இந்தாருங்கோ, மாமா !

**ராமா** (கடிதத்தைப் பார்த்து விட்டு):—இதென்ன கூத்து ! இவ்வளவு தூரத்துக்கு விஷயம் முற்று வானேன் ! ஏதாவது வீட்டிலே தகராறேடா ?

**மங்களம் :**—குடும்பம்னு ஒன்னு இருந்தால் ஏதாவது தகராறு இருந்து கொண்டுதானே இருக்கும்னு கேளுடா சேஷு !

**ராமா :**—என்ன இருந்தாலும் இவ்வளவு தூரத்துக்கு முற்ற விடலாமா !

**மங்களம் :**—வீட்டிலே ஒரு சாமான் இல்லேன்னு ஒரு பொம்மனாட்டி சொல்லாமல் இருப்பாளா ! இதை யெல்லாம் ஒரு குற்றமா எடுத்துண்டா...... எங்கப்பாவைச் சொல்லணும். இவர் கழுத்திலே என்னைக் கொண்டு வந்து கட்டினாரே! தம் அந்தஸ்துக்கும் பவிஷுக்கும் தகுந்தபடி நல்ல இடமாகப் பார்த்து......சொல்லேண்டா சேஷு !

**ராமா :**—அடாடா ! விஷயம் முற்றி வினையாகப் போனதற்குக் காரணம் இப்பொத்தான் புரிந்தது. பெண்களால் தன் பிறந்தகத்தைப் பற்றிப் பெருமை அடித்துக் கொள்ளாமல் இருக்க முடிவ இல்லே. புருஷர்களால் அவர்களுடைய பெருமையைக் கேட்டுக் கொண்டிருக்க முடிவதில்லே.—சேஷு, இனிமேல் உன் அம்மாவைக் கொஞ்சம் வாய் அடக்கமாக இருக்கச் சொல்லு. இந்தப் பயல் எங்கே போய்விடப் போகிறான் ! எங்கேயாவது மடத்திலே போய்ப் படுத்துத் தூங்கிக் கொண் டிருப்பான். நான் போய்ப் பிடித்து இழுத்து வருகிறேன். (எழுந்திருக்கிறான்)

**சுப்பு** [பிரவேசித்து]:—மாமி ! மாமா அகப்பட்டு விட்டார். மெதுவாகத் தாஜா பண்ணிக் கையோடு அழைத்து வந்துவிட்டேன்.

**தங்கசாமி :**—நாராயண, நாராயண, நாராயண !

**சுப்பு :**—டேய் சேஷு ! இந்தச் சுப்புவை என்ன



பெரியவர் (பையனிடம்):—இந்தா பையா, அந்த நாயின் வாலைப் பிடித்து இழுக்காதே ! அது கடித்து விடப் போகிறது !

பையன்:—அது கடிக்காது, மாமா ! எனக்கு நன்றாய்த் தெரியும் !

பெரியவர் (ஆச்சரியத்துடன்):—அது எப்படி ?

பையன் :—நாய் தன் வாயால் தானே கடிக்கும் ? அதற்கு வாலின் நுனியிலே வாய் கிடையாதே !

கொண்டு மடத்திலே போய் உட்கார்ந்துகொண்டு விடுவது.

**பாப்பா :**—மாமா, எனக்கும் இந்தச் சண்டையெல்லாம் பிடிக்கல்லே. நானும் சந்நியாசம் எடுத்துக்கலாமோ !

ற விடலாமா !




மாலை வெகு நேரமாகி விட்டது. அன்று அவர்களுக்குள் கதையும் பேச்சும் சற்று நீண்டு விடவே, பொழுது போனதே தெரியவில்லை. அவசரம் அவசரமாக அந்தக் காட்டில் குவித்து வைத்திருந்த சருகு இலைகளைக் கோணியில் திணித்துக் கொண்டு புறப்பட்டார்கள். அப் பெண்களுக்கெல்லாம் தலைமை வகித்த பொன்னம்மாள் "சீக்கிரம் நடவுங்கடி!" என்று அவ்வப்போது சொல்லிக் கொண்டே நடந்தாள். மூன்னோடைப் பக்கம் வந்த பொழுது, "அங்கொருத்தரும் இங்கொருத்தருமாக வருகிறீர்களே? எல்லாரும் கும்பலாய்ச் சேர்ந்து வாங்களேன்" என்றாள். அது கொஞ்சம் அடர்த்தியான புதர் நிறைந்த இடம்.

அந்தச் சமயத்தில் அந்தப் புதர் அடர்ந்த ஓடையின் மூலையில் சள சளவென்று தண்ணீரில் சத்தம் கேட்டது. யாரோ தண்ணீரில் திக்கு முக்காடிக் கொண்டு கையைத் தூக்கிக் காட்டுவது போலவும் தெரிந்தது. எல்லாரும் கும்பலாய் ஓடினார்கள். தங்கள் சாக்கு மூட்டைகளைத் தண்ணீரில் மிதக்க விட்டு, அந்தத் தூக்கின கையைப் பிடித்திழுத்து வந்து கரையில் போட்டார்கள்.

அந்த இளம் பிராயத்துப் பெண் வயிறு நிறையத் தண்ணீர் குடித்து விட்டிருந்தாள். அவள் தலை தொங்கிட்டுக் கிடந்தது.

"ஐயோ! இளம் வயசா தெரியுதே! கழுத்தைப் பார்த்தால் கல்யாணம் ஆனது போலக் கூடத் தெரியவில்லையே!" என்று கையைப் பிசைந்து கொண்டார்கள். பொன்னம்மாள் அந்தப் பெண்ணின் மூக்கில் விரலை வைத்துப் பார்த்தாள். இலேசாக மூச்சு வருகிறாப் போல் தெரியவே, அப்படியே அவளைக் கால் மாடு தலைமாடாகத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு சக்கரம் சுழற்றுவது போல கிர்...ர்...ர் என்று சுற்றினாள். அந்தப் பெண் வாயிலிருந்து நிறைய தண்ணீர் கொட்டிற்று. அப்பொழுதுதான் அவள் மெதுவாகக் கண்களைத் திறந்து பார்த்தாள். சற்றுநேரம் களைப் பாறிய பிறகு அவளை மெதுவாகக் கையைப் பிடித்து நடத்தி வந்தார்கள். கிராமத்துக்கு வந்ததும் பொன்னம்மாள் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனாள்.

இந்தச் செய்தி கிராம முழுதும் பஞ்சில் தீ பிடித்தது போல் பரவி விட்டது. கிராம மக்கள் அனைவரும் கும்பல் கும்பலாகப் பொன்னம்மாள் வீட்டுக்கு வந்து அந்தப் பெண்ணைப்பற்றி விசாரித்தார்கள். அந்தப் பெண் ஒன்றும் பேசாமல் தலை குனிந்த வண்ணம் உட்கார்ந் திருந்தாள். ஒருவர் மாற்றி ஒருவர் அந்தப் பெண்ணை என்ன என்னவோ கேள்விகள் கேட்டுத் தொந்தரவு செய்தனர். பாவம்! அந்தப் பெண் திகைத்துப் போய் உட்கார்ந் திருந்தாள். மேலும் மேலும் தொந்தரவு படுத்தவே அந்தப் பெண் வாயைத் திறந்து ஏதோ சொன்னாள்.

அவள் சொன்ன வார்த்தைகள் அவ்வளவு தெளிவாகப் புரியவில்லையானாலும் அவள் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் மட்டும் கொஞ்சம் தெளிவாக இருந்தது.

"என் மூளை குழம்பிக் கிடக்கிறது. தொந்தரவு பண்ணாதீங்க ஆச்சி!" என்று மெதுவாகச் சொன்னாள். அவள் கண்கள் கண்ணீரில் மிதந்தன. உடனே பொன்னம்மாள் அந்தப் பெண்ணைச் சுற்றிக் கூட்டம் போட்டுக் கொண்டிருந்தவர்களை அப்புறம் வரச் சொல்லி அனுப்பி வைத்தாள்.

மறுநாள் வழக்கம் போலக் கோணியை எடுத்துக் கொண்டு செத்தை அள்ளுவதற்குக் காட்டுக்குப் புறப்பட்டபொழுது எல்லாரும் பொன்னம்மாளைச் சூழ்ந்து கொண்டார்கள். "மூன்னோடைக்காரப் பெண்ணை விசாரித்தாயா? அவள் யாராம், என்ன சொன்னாள்? ஏன் தண்ணீரில் மூழ்கித் தற்கொலை செய்து கொள்ள முயன்றாளாம்" என்று ஏக காலத்தில் கேட்டார்கள்.

"பாவம், பெண் ரொம்பவும் கஷ்டப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. சொந்த ஊர் உசிலம் பட்டியாம். இங்கே யிருந்து பத்து மைலாவது இருக்கும். எவ்வளவு மன வேதனை இருந்தால் உயிரை விடத் துணிந்திருப்பாள்! அப்பா, அம்மா யாரு என்று கூட அவளுக்குத் தெரியாதாம். அவளுக்கு நினைவு தெரிந்த நாளிலே யிருந்து உசிலம் பட்டியில் யாரோ ஒரு வெங்காயக்காரி வீட்டில்தான் வளர்ந்தாளாம். அந்த மகாராசி தோட்டக்கால் பயிர் வைத்துக் கொண்டு காய் கறி வியாபாரம் பண்ணி வருகிறாளாம். காய் கறித் தோட்ட முழுவதற்கும் இவள் தான் இடுப்புடைய குடம் குடமாய்த் தண்ணீர் ஊத்தியாகணுமாம். காலையிலிருந்து உச்சி வேளைவரை தண்ணீர் தூக்கியாகணுமாம். ஒரு குடம் குறைந்து விட்டாலும் அவளைப் பிடித்து இழுத்துப் போட்டு அடி அடியென்று அடிப்பாளாம் அந்தப் பாவி......"

"ஐயோ, பாவம்!" என்று அனைவரும் 'த்சு' கொட்டி அனுதாபப் பட்டார்கள்.

"இப்படித்தான் நான் முழுவதும் உழைத்து வந்தாளே அவளுக்கு வயிரார சோறு உண்டா? கட்டிக்க நல்ல சிற்றுடை உண்டா? அதுவும் கிடையாது. அந்தப் பெண் அதற்கெல்லாம் மனம் வருத்தப்படவே இல்லே. தன் விதியை நினைத்துக்கொண்டு மாடாட்டம் உழைக்க அவள் எப்பொழுதும் தயாராகத்தான் இருந்தாளாம்.

"அந்த வெங்காயக்காரிக்குத் தம்பி ஒருத்தன்; பொல்லாத கேடியாம். அடிக்கடி திருடி விட்டு ஜெயிலுக்குப் போய்விடுவானாம். கடைசியாக ஐந்து வருஷம் ஜெயிலிலே இருந்துவிட்டுப் போனவாரம்தான் வந்தானாம். அவன் வந்ததிலிருந்து வெங்காயக்காரி இவளிடம் ரொம்பவும் பிரியமாக இருக்க ஆரம்பித்தாளாம். அவள் தம்பிக்கு இவளை விட்டுத்தான் சோறு போடச் சொல்லுவாளாம். அந்தத் தடியனும் இவளை 'ஓ, புள்ளே! ஏ, புள்ளே!' என்றழைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வந்தானாம். 'என்னடி ரொம்ப, வெட்கப்படுகிறே, நாளைக்கு அவனோடுதான் நீ வாழணும்' என்றாளாம் வெங்காயக்காரி.

"இதைக் கேட்டதும் அந்தப் பெண்ணுக்குத் தலை சுக்கு நூறாக வெடித்துவிடும் போலிருந்ததாம். அவளுடைய மனதை வாள் போட்டு அறுப்பது போலிருந்ததாம். அந்தக் கேடியின் பயங்கர முகத்தையும், அவனுடைய மிருகத்தனமான செயலையும் நினைத்தாலே அவளுக்குப் பயமாக இருந்ததாம். யாரிடவாவது சொல்லிக் கொள்ளலாம் என்றாலோ உற்றாரோ உறவினரோ யாரும் கிடையாதாம். அந்த அனாதைப் பெண் என்ன செய்வாள் பாவம். மறுநாளே இரவோடு இரவாக கிளம்பி விட்டாள் உயிரை விட்டுவிட..."

"ஐயோ பாவமே! அந்தப் பெண் பெயர் என்ன, பொன்னம்மா?" என்று மிகுந்த பரிவுடன் கேட்டார்கள் அவர்கள்.

"அட, இவ்வளவு கேட்டேனே அவள் பெயரைக் கேட்க மறந்துவிட்டேன்" என்று சொல்லி வருந்தினாள் பொன்னம்மாள்.

"அவள் பெயர் எதுவாத்தான் இருக்கட்டுமே, நமக்கு என்னவோ அவள் முன்னோடைப் பெண்தானே" என்று சொல்லி அனைவரும் சிரித்துக் கொண்டார்கள்.

அன்று சாயங்காலந்தான் பொன்னம்மாள் மகன் வீரன் ஊரிலிருந்து வந்தான். 'அம்மா!' என்றழைத்துக்கொண்டே உள்ளே நுழைந்தான். பதிலொன்றுங் காணோம். "அம்மா! அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டு கொல்லை வரையும் போனான். அங்கு முன்னோடைப் பெண் அப்பொழுது தான் பாகற் கொடி படருவதற்குக் கொம்பு நட்டுக் கொண்டிருந்தாள். அவள் கொம்பு நடும் பாவத்தைப் பார்த்தாலே அதில் ஒரு பண்பாடு தெரிந்தது. அவளைப் பார்த்ததும் அப்படியே திகைத்து நின்றுவிட்டான் வீரன். ஏதோ கிராம தேவதையே அங்கு வந்து நிற்பது போலிருந்தது அவனுக்கு. முன்னோடைப் பெண்ணும் அவனைப் பார்த்துவிட்டுத் திடுக்கிட்டுத்தான் போய் விட்டாள். 'ஊருக்குப் போயிருக்கு என்று சொன்னாங்களே அவுங்களாத்தான் இருக்கும் இது' என்று ஊகித்துக் கொண்டாள். உடனே வீரன் திடு திடுவென்று திரும்பி வந்து தெருத் திண்ணையின் மீது உட்கார்ந்து கொண்டு விட்டான். சற்று நேரம் கழித்து முன்னோடைக்காரப் பெண் கதவின் பக்கத்தில் நின்று எட்டிப் பார்க்கப் போனாள். வீரன் தான் அப்பொழுதில் இருந்து உள்ளேயே பார்த்துக் கொண்டிருந்தானே! அவன் தன்னை நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்டு அவள் வெட்கப்பட்டாள். 'சடக்'கென்று தலையை உள்ளுக் கிழுத்துக் கொண்டு ஓடிப் போய்விட்டாள்.



அப்பொழுதுதான் காட்டிலிருந்து செத்தை வாரிக் கொண்டு வந்தாள் பொன்னம்மாள். "எப்போ வந்தேடா, வீரப்பா? நாளைக்கு வருவாய் என்றல்லவா நினைத்தேன். ஏன் திண்ணையிலேயே திகைத்து உட்கார்ந்துவிட்டே? உள்ளே வா, போகலாம்" என்றாள்.



"அது இருக்கட்டும், உள்ளே இருக்கிறது யாரம்மா?" என்று ஆவலுடன் கேட்டான் வீரன்.

"அவளா!" என்று இழுத்தவள் 'சடக்' கென்று வேடிக்கையாக "என்னுடைய மருமகள்தான்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே சென்றாள். 'அப்படின்னு...?' என்று கேட்டுக் கொண்டே வீரனும் அவள் பின்னாலேயே உள்ளே சென்றான்.

பிறகு பொன்னம்மாள் அவனை உட்கார வைத்துக் கொண்டு ஆதியோடந்தமாக அந்தப் பெண்ணின் சோகக் கதையையெல்லாம் சொன்னாள். அவனும் "ஐயோ பாவம்" என்று சொல்லி அனுதாபப் பட்டான்.

பிறகு அவள் தொடர்ந்து "என்னமோ நீ அவளைப்பற்றிக் கேட்கவே 'என் மருமகள்' என்று என்னையு மறியாமல் என் வாயிலே வந்து விட்டது. உனக்குத்தான் எத்தனையோ பெண் பார்த்தேன். ஒரு பெண்ணையும் உனக்குப் பிடிக்கவில்லை. நீயோ நாலெழுத்துப் படித்தவன். உன் நாகரிகத்துக்கு அதுகளெல்லாம் பிடிக்காதுதான். இவளைப் பார்த்தாயா? சித்தடக்கமா, முகத்தில் நல்ல களையு மிருக்கு. நாகரிகத்துக்கு நாகரிகமாக இருக்கிறாள். நம்ம வேலைக்கும் சௌகர்யமாக இருப்பாள். நமக்கும் ஒரு அனாதைப் பெண்ணைக் காப்பாத்தினோம் என்ற புண்ணியமும் இருக்கும். எனக்கு என்னவோ அவளைப் பார்த்ததிலிருந்து அவள்மீது ஒரு அலாதியான பிரியம் ஏற்பட்டு விட்டது. உன்னைப் பார்க்கும்போது எனக்கு எப்படி சந்தோஷமாக இருக்கிறதோ அதே போல அவளைப் பார்க்கும்போதும் என் மனது சந்தோஷப் படுகிறது. இந்தத் தடவை ஒண்ணும் சொல்லாதே. இவளையே என் மருமகளாகச் செய்துவிடு" என்று மன்றாடினாள்.

வீரன் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவன் உள்ளத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொண்டு வருவது அவன் முகத்தில் நன்றாகத் தெரிந்தது.

அப்படியும் இப்படியும் போய்க் கொண்டிருந்த முள்ளோடைக் காரப் பெண்ணுக்குத் தாயும் மகனும் பேசிக் கொண்டதெல்லாம் காதிலே விழாமலா இருந்திருக்கும்! அவளுக்கு உவகை பொங்கி வழிந்தது. அவளையும் மீறிய உணர்ச்சி பொன்னம்மாள் மீதும் அவள் மகன் வீரன்மீதும் பற்றுக் கொள்ளச் செய்தது. அவள் வீரனைத் தன் கணவராகவும் பொன்னம்மாளைத் தன் மாமியாகவுமே பாவிக்கத் தொடங்கி விட்டாள்.

மறு நாளே பொன்னம்மாள் கிராமத்து ஜோசியனைப் போய்க் கேட்டாள். அவனும் நல்ல பதிலே சொன்னான்.

இருந்தும் கடைசி நேரத்திலே பொன்னம்மாள் மனதில் 'அவள் என்ன சாதியோ?' என்ற சந்தேகம் முளைத்தது. யார் யாரையோ கேட்டுப் பார்த்தாள். "எல்லாம் நம்ப சாதியாகத்தா னிருப்பாள். நெற்றியிலே பச்சை கூடக் குத்தி யிருக்காளே!" என்றார்கள். ஆனால் ஒரு சிலர் "அது எப்படிச் சொல்ல முடியும்? அவள் என்ன சாதியோ?" என்றும் சொல்லி வைத்தார்கள். பொன்னம்மாள் மனம் ஒரு நிலையில் இல்லை.

வீரன் மட்டும் தைரியமாக இருந்தான். "அவள் எந்த சாதியாக இருந்தாலும் சரி, அவளை நான் கல்யாணம் செய்து கொள்ளத்தான் போகிறேன். அந்த உசிலம்பட்டி வெங்காயக்காரி ஒண்ணும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவள் இல்லை. தாழ்ந்த சாதியோ உயர்ந்த சாதியோ அவள் என் மனைவி. உனக்கு மருமகள். நம்மைப் பார்த்து அவளுக்கு இந்த ஊரார் மதிப்புக் கொடுக்கவேண்டியதுதான்" என்று சொல்லி விட்டான்.

பொன்னம்மாள் மனதில் வீரன் ஏதாவது நினைத்துக் கொள்ளுவானோ என்றுதான் வருத்தப்பட்டாள். அவளுக்குத்தான் அந்தப் பெண்ணைப் பார்த்ததிலிருந்தே அவளையும் அறியாத ஒரு பாசம் ஏற்பட்டு விட்டதே!



காய் கறி விற்பவன்:— இப்படி ரொம்ப நேரம் பேரம் பேசி விட்டு ஒன்றும் வாங்காமல் போகாதீங்க! ஒரு அணாவுக்காவது கண்டிப்பாய் ஏதாவது வாங்கித்தான் ஆகணும்!

வாங்க வந்த அம்மாள்:— அடே! அதென்னப்பா! கட்டாயம் வாங்கித்தான் ஆகணுமோ?

காய் கறி விற்பவன்:— இல்லீங்க! உங்களோடு பேரம் பேசிப் பேசியே நெஞ்சி வறண்டு போச்சு, அம்மா! ஒரு சோடா வாங்கிக் குடிப்பதற்கு ஒரு அணாவுக்கு இந்த வாழைக் காயை யாவது வாங்கிக்கங்க!

வழக்கம்போல ஆற்றுக்குத் தண்ணீர் எடுக்க வெளியே போன முன்னோடைக்காரப் பெண் திரும்பி வந்தபோது திண்ணையிலே உசிலம் பட்டி வெங்காயக்காரி உட்கார்ந்திருந்ததைக் கண்டு திடுக்கிட்டுப் போனாள். இடுப்பிலிருந்த குடம் கீழே நழுவியது. 'ஓ!' வெனக் கூவிக்கொண்டே உள்ளே ஓடி வந்தாள். "ஐயோ! அந்த வெங்காயக்காரி வந்திருக்காளே!" என்று கத்தினாள். கொல்லையில் மாட்டுக்குத் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்த பொன்னம்மாள் சத்தத்தைக் கேட்டு ஓடி வந்தாள். அதற்குள் அண்டையிலும் பக்கத்திலும் இருந்தவர்கள் எல்லாரும் கூடி விட்டார்கள்.

வெங்காயக்காரி பிரமாதமாய்க் கூச்சல் போட்டாள். "இப்படிப் பட்டப் பகலிலே என் மகளை மயக்கி அழைத்து வந்துவிட்டீர்களே இது தகுமா? உங்களைக் கேட்க யாருமில்லையா?" என்றாள். பொன்னம்மாளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "யார் மகளடி அவள்? உன் மகளா?" என்று தன் முந்தியை வரிந்து கட்டிக்கொண்டு வாதாடக் கிளம்பி விட்டாள். அதற்குள் ஊரே கூடி விட்டது. ஒவ்வொருவரும் ஒரு நியாயம் பேசினார்கள். உசிலம் பட்டி வெங்காயக்காரி எதற்குமே கட்டுப்படவில்லை.

வெளியே போயிருந்த வீரன் அப்பொழுது தான் வந்தான். விஷயத்தை விசாரித்தான். அவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. இதை இரண்டில் ஒன்று தீர்த்துக் கட்ட வேண்டுமென்று அப்படியே அனைவரையும் பக்கத்து டவுன் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிக்கொண்டு போனான்.

அங்கு ஏட்டுதான் 'டூட்டி' யிலிருந்தார். வெங்காயக்காரியையும் அந்த முன்னோடைக்காரப் பெண்ணையும் வைத்துக் கொண்டு அநேக குறுக்குக் கேள்விகள் போட்டு விசாரித்தார். உசிலம்பட்டி வெங்காயக்காரி சொன்னதையே சொல்லிக்கொண்டு எல்லாரையும் எடுத்தெறிந்து பேசினாள்.

வெங்காயக்காரியின் மழுப்பலைக் கேட்டு ஏட்டுக்குக் கோபம் வந்துவிட்டது. குலைக்கிற நாய் வேட்டை பிடிக்காதென்று "டேய் முன்னூத்திப் பதினாறு! லத்தியைக் கொண்டாடா! இப்பொழுதே உண்மையைக் கக்க வைக்கிறேன்" என்று வெடுக்கென்று எழுந்தார். உடனே நாடி விழுந்து விட்டது வெங்காயக் காரிக்கு. மாலை மாலையாய்க் கண்ணீர் விட்டுக்கொண்டே உண்மையைச் சொல்ல ஆரம்பித்து விட்டாள்.

"பதினாறு வருஷங்களுக்கு முன், போடி நாயக்கனூர் திருவிழாவுக்குப் போயிருந்தேன். அங்கே பெரிய கம்பத்தம் வீட்டு வாசலிலே ஒரு பெண் குழந்தை நிறைய நகை போட்டுக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தது. நான் அந்தக் குழந்தையைத் திருடி விட்டேன். அவள் மேலேயிருந்த நகைகளுக்கு ஆசைப் பட்டுத்தான் குழந்தையைத் திருடினேன். ஆனால் குழந்தை அழகா யிருக்கவே அதையும் வளர்த்துக் கொண்டு வந்தேன்" என்று சொன்னாள் வெங்காயக்காரி.

இதைக் கேட்டதும் பொன்னம்மாளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பதினாறு வருஷங்களுக்கு முன்னால் தன் அண்ணன் மகள் திருவிழாவின்போது காணாமற் போனது நினைவுக்கு வந்தது. 'ஒரு வேளை இவள் என் அண்ணன் மகள்தானோ! அவள் குழந்தையா யிருக்கும்போது அவள் வலது கையிலே கூட அவள் பெயர் பச்சைக் குத்தி யிருந்ததே! பெரிய கம்பத்தம் என்றால் என் அண்ணன் வீடாச்சே! அவர் பெண் குழந்தை காணாமற்போன ஏக்கத்திலேயே தான் அவரும் இறந்து போனார்' என்று எண்ணினாள்.

உடனே அவளுக்கு அந்தக் காணாமற் போன குழந்தையின் பெயர் ஞாபகம் வந்தது. "உன் பெயர் முத்தம்மாள்தானே கண்ணு? எங்கே, உன் வலது கையைக் காண்பி?" என்று அந்த முன்னோடைக்காரப் பெண்ணைக் கேட்டாள் வீரனின் தாய்.

"ஆமாம்" என்று சொல்லிவிட்டுத் தன் வலது கையைக் காண்பித்தாள் முன்னோடைக்காரப் பெண். அதில் 'முத்தம்மாள்' என்று பச்சை குத்தி யிருந்தது. "ஆ! கடவுள் கொடுத்த என் சொந்த மருமகளடி நீ" என்று அவளைக் கட்டி யணைத்து உச்சி மோந்தாள் பொன்னம்மாள்.

அடுத்த முகூர்த்தத்திலேயே வீரனுக்கும் முத்தம்மாளுக்கும் திருமணம் நடந்தது.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 9. கண் கெடாமல் இருக்க

கண் எவ்வளவு இன்றியமையாத தென்று சொல்லத் தேவையில்லை. கண்கள் இல்லையானால் ஒருவன் வாழ்வின் பல சுகங்களை அனுபவிக்க முடியாது. உலகத்திலுள்ள பல இயற்கை வர்ண ஜாலங்களைக் காண முடியாது. உலக சிருஷ்டியில் ஜீவராசிகளின் அற்புதங்களை அறிய முடியாது; அதன் லீலைகளை உணர முடியாது. ஒருவனுக்கு நல்ல மூளை யிருந்தாலும், இவைகளை உணர வேண்டுமானால், தெரிய வேண்டுமானால் கண்களின் உதவியினால்தான் அடைய முடியும். அப்பேர்ப்பட்ட கண்களை என்னதான் 'கண்ணே' போலப் போற்றினாலும் நாற்பது வயதானதும் அதன் சக்தி குன்றத்தான் செய்கின்றது. அச்சமயம் நமது உடலில் இயற்கையாய் ஏற்படும் இருதய, நரம்பு, ரத்த மாறுதலானது இந்தப் பலவீனத்தை இன்னமும் அதிகப்படுத்தும்.

கண்களுக்குப் பல விதங்களினால் பல கோளாறுகள் ஏற்படுகின்றன. சில பிறவியினாலேயே ஏற்படும்; சில பழக்க வழக்கங்களினால் ஏற்படும்; சில தொத்து நோய்களால் ஏற்படும்; சில இயற்கையாய் ஏற்படும். பிறவியினால் கண் இல்லாமலோ கண் பார்வையில்லாமலோ ஏற்பட்டால் அதற்கு ஆசனங்களினால் ஒன்றும் செய்ய முடியாது. ஒரு கால் கண் நரம்புகள் பலவீனமாயிருந்து ரத்த போஷணை அவைகளுக்குக் கிடைக்காமலிருந்து அதனால் கண் பார்வை யில்லையானால், இதை ஆசனங்களால் குணமாக்கலாம்.

சிரசாசனமும், மற்றக் கண் பயிற்சிகளும் செய்தால் குணமாகும். மற்றக் குறைகளை மாற்ற முடியாது. பிறவிக் குருடர்கள் நம் தேசத்தில் இருப்பதுபோல் அதிகமான தொகை வேறெந்த தேசத்திலுமே கிடையாது. இதற்கெல்லாம் பெற்றோர்களின் போக்கே காரணம். அவர்கள்தான் இதற்கு உத்தரவாதம். அவர்களுடைய கண்மூடித்தனமான போக்கே, குழந்தைகளின் வாழ்க்கையைப் பெரிதும் பாழாக்கி விடுகிறது.

சில கோளாறுகள் நமது பழக்க வழக்கங்களால் ஏற்படுகின்றன. நாம் உண்ணும் உணவில் உணவுச் சத்து மிகவும் குறைந்திருந்தால் கண் பார்வை குறையும். சிலருக்கு இருந்தாற்போல் இருந்து கண் முன்னால் இருப்பவை ஒன்றுமே தெரியாது. அதுவும் உணவுச் சத்துக் குறைவினாலும், நரம்பு பலவீனத்தினாலும், சரியான ரத்தபோஷணையில்லாததினாலும் ஏற்படுகின்றன. இதைச் சிரசாசனம் செய்வதினாலும், உணவு, ஒழுக்கங்களினாலும் போக்கடிக்கலாம். சிலருக்கு அதிக வெளிச்சம் உபயோகிப்பதினால் கண்கள் பாதிக்கும். மின்சார விளக்கு நமக்கு எவ்வளவோ அனுகூலமாய்த்தானிருக்கின்றது. அதையும் அளவுடன் உபயோகித்தால் தான் நல்லது. 15, 20, 25 காண்டில் சக்தியுள்ள பல்புகளை உபயோகிக்கலாம். சிலர் 50, 100 காண்டில் பல்புகளையே எங்கும் மாட்டுவர். இவர்களின் அறியாமையைப் பற்றி என்ன சொல்வது! கண்மணியில் ஒரு திரை இருக்கின்றது. அது வெளிச்சத்திற்குத் தக்கபடி விரியவும் சுருங்கவும் செய்யும். வெளிச்சம் அதிகமானால் சுருங்க வேண்டிய அளவு வெளிச்சத்தைக் கண்ணின் இருக்கும் கண்ணாடி வழியே உள்ளே செல்லவிடும். வெளிச்சம் குறைவாயிருந்தால் அந்தத் திரை சற்று விலகிச் சந்து பெரிதாகிவிடும். வெய்யிலில் செல்பவர்கள் கண்களையும் சுருக்கி, முகத்தையும் சுருக்கி வைத்துக் கொள்வதைப் பார்த்திருக்கலாம். இப்படிப் பகலில் கஷ்டப்பட்ட கண்களுக்கு ஓய்வு கொடுக்கவே 'இரவு' வருகின்றது. அந்த இரவையும் பகலாக்கிக் கண்களுக்கு அதிக வெளிச்சம் கொடுத்துக் கெடுக்கிறோம். மற்றும் பகலைப் போல் இரவைக் கழிக்கும் அன்பர்களைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. இரவுக் காட்சிகளுக்குச் சென்று, இரவில் பல அக்கிரமங்களைப் புரிபவர்களுக்குக் கண் கெடுவதற்குச் சொல்லவும் வேண்டுமா!

சினிமாக் காட்சிகள் வேறு ஒரு பக்கம் தன் கைங்கரியத்தைச் செய்கின்றன. திரைக்குச் சமீபத்தில் உட்கார்ந்து பார்க்கிறவர்களுக்குக் கண்கள் கெடச் சொல்லவும் வேண்டுமா! இத்தனை அடி தள்ளித்தான் உட்கார்ந்து பார்க்க வேண்டுமென்று ஒரு விதியையாவது அரசாங்கம் ஏற்படுத்தினால் நல்லது. இரவுக் காட்சிகளை நிறுத்தி விடவேண்டும். அதற்குப் பதில் ஜப்பான் தேசத்தில் காலை முதற்கொண்டு காட்சி நடக்குமாமே, அதைப் போல ஏற்பாடு செய்தாலாவது நல்லது.

புகைப் பழக்கமும் கண்களைக் கெடுப்பதற்கு ஒரு வழி. புகைப் பிடிப்பவர்களைப் பாருங்கள்; கண்கள் நெருப்பாய் ஜொலிக்கும். அத்தனையும் நரம்புகளின் புடைப்பே! அவர்களின் கண்கள் மற்றெல்லோரையும் விடச் சீக்கிரம் பழுதடைந்து விடுகிறது. சினிமாக் காட்சிகளில் புகை பிடிக்கக் கூடாது என்று தடை விதிக்கப் பட்டிருக்கிறது. இரவுக் காட்சிகளில் புகை பிடிக்காமலிருக்கக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். சர்க்கார் கொஞ்சம் மனது வைத்துச் சினிமாக் கொட்டகையில் புகையே பிடிக்கக் கூடாது என்று சட்டமியற்றி, அது சரியாக அமுல் நடத்தப்பட்டு வருகிறதா என்றும் பார்க்க வேண்டும்.

ஒவ்வொருவரும் அவரவர்கள் கண்களை ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். 'கண்களுக்குப் பாதுகாப்பளிக்கிறேன்' என்று யாரும் கண்மூடி மௌனியாய் உட்கார்ந்திருக்க முடியாது. தூங்கும் நேரம் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் கண்களை ஏதாவது ஒன்றில் உபயோகிக்க வேண்டியதாய்த்தான் இருக்கிறது. அவரவர்களின் உத்தியோகத்திற்குத் தக்கபடி கண்களை நுணுக்கமாகவும் சாதாரணமாகவும் உபயோகிக்க வரும். நுணுக்கமாய் உபயோகிப்பவர்களுக்கு நாற்பது வயதில் இயற்கையாய்ப் பாதிக்கும். சிலர் குனிந்தே எழுத்து வேலை, சித்திர வேலைகளைப் போன்ற பல வேலைகளைச் செய்கின்றனர். அவர்களுக்குச் சில நாளில் தூரப் பார்வை சரியாய்த் தெரியாது. சமீபத்தில் நன்றாய்த் தெரியும். காரணம் குனிந்து பார்வையைச் சமீபத்தில் செலுத்துவதால் கண்களைச் சுற்றியிருக்கும் தசைகள் அதற்குத் தகுந்தாற் போல் அமைந்து விடுகின்றன. அவர்கள் தலை நிமிர்ந்து நேராய்ப் பார்க்கும்போது கண் நிமிர்ந்து நேராய்த் திரும்ப முடியாமல் தசைகளால் இழுக்கப்படுகின்றன. அதனால் அவர்களுக்குக் கண் பார்வைக் குறைவு என்று அர்த்தமல்ல. தூரப் பார்வை மட்டும் மங்கினாற் போலத் தெரியும். அதைப்

போலவே தூரத்திலேயே பார்த்துப் பழக்கமானவர்களுக்குச் சமீபத்தில் பார்க்கக் கண் விழியை திருப்ப முடியாமல் தசைகள் பிடித்துக் கொள்ளும். அதற்கெல்லாம் தற்கால விஞ்ஞான உலகில் பல சாதனங்களைக் கண்டு பிடித்திருக்கின்றனர். மூக்குக் கண்ணாடி இவர்களுக்கு மிகத் துணை செய்கின்றது. இந்தக் கண்ணாடி ஏற்படவில்லையென்றால் அநேகர் இந்தக் காலத்தில் கஷ்டப்படத்தான் வேண்டியிருக்கும்.

இந்தக் காலத்தில் எந்த விதமான கண் கோளாறுகள் ஏற்பட்டாலும் அவைகளுக்கு அற்புதமான சிகிச்சைகள் எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் ஏதோ கோளாறு ஏற்பட்டது, கண்ணாடி அணிந்தோம்; சில நாட்களில் தீர்ந்து விட்டது, கழட்டி எறிந்தோம் என்று இல்லை. இருக்க இருக்க, கண்ணாடியின் எண்களை மாற்றுவதும், புதிதாய் வாங்குவதுமாகவே இருக்க வேண்டியிருக்கிறது. இதற்கு ஒரு மார்க்கமும் கண்டு பிடித்ததாய்த் தெரியவில்லை. பண வசதியுள்ளவர்கள் கண்ணாடியை அடிக்கடி மாற்றவோ வேறு வாங்கவோ டாக்டர்களுக்குப் பணம் கொடுக்கவோ முடியும். வசதியில்லாதவர்களின் கதியென்ன! இவர்கள் பிழைக்க வழி! தெருவில் விற்கும் கண்ணாடிகளில் அவர்களாகவே போட்டுப் பார்த்து, நன்றாய்ப் படிக்க முடிந்ததை ஏதோ ஒன்றிரண்டு ரூபாய் விலையில் வாங்கி மாட்டிக் கொள்வார்கள். இந்த மாதிரிதான் அநேகமாய் நடக்கிறது. இதனால் இன்னும் அதிகமாகக் கண்களைக் கெடுத்துக் கொண்டவர்களுமுண்டு. சிலருக்கு டாக்டரே எழுதித் தந்து கடைசி எண் வரைக் கூட கண்ணாடி அணிந்தாய் விட்டது. இனி நம்பரே கிடையாது. ஆனால் பார்வை என்னமோ வரவில்லை என்கிறவர்களும் உண்டு. சிலர் பல வைத்தியம் செய்து பார்த்தும் பார்வை கிடைக்கவில்லையே என்கிறவர்களும் உண்டு. இவர்களெல்லாம் வயதானவர்களென்று எண்ணிவிடாதீர்கள். வாலிபர்கள் தான்!

அப்பேர்ப்பட்டவர்களுக்கெல்லாம் இச் சிரசாசனம் மிக மிகத் துணை செய்கிறது. சிரசாசனம் செய்யும்போது கண்களுக்கு ரத்தம் நன்கு பாய்வதாகவும் அதன் தசைகள், நரம்புகள், சவ்வுகள், திரைகள், அணுக்கள் எல்லாம் சுகமடைவதாகவும், பலம் பெறுவதாகவும் மனதினால் நினைக்க வேண்டும். தவிர, கண் பயிற்சி என்று ஒன்று உண்டு. அதை இச் சிரசாசனம் செய்யும்போது செய்ய வேண்டும். அதாவது கண்களைப் பல கோணங்களில் திருப்புவதும் சுழற்றுவதுமாகும். ஒவ்வொரு கோணங்களையும் முதலில் மூன்று தடவை செய்து, பிறகு வாரத்திற்கு ஒரு தடவை அதிகமாக்கிக் கொண்டு வந்து ஏழெட்டுத் தடவைகள் வரைச் செய்யலாம்.

இந்தப் பயிற்சிகளை எப்படிச் செய்வது என்பதைப் படங்களுடன் பிறகு தெரிவிக்கிறேன்.



பத்திரிகை நிருபரும் புகைப்பட நிபுணருமான ஸ்ரீ கே. நடராஜன் அவர்களுக்கும், டில்லி அகில இந்திய ரேடியோ ஆர்ட்டிஸ்ட் குமாரி புஷ்பாவுக்கும் சென்ற மாதக் கடைசியில், மத்திய சர்க்கார் மந்திரி கனம் என். வி. காட்கில் அவர்கள் இல்லத்தில் சாஸ்திர ரீதியாகவும் சட்ட ரீதியாகவும் திருமணம் இனிது நடந்தேறியது. திருமணத்தை டில்லி டிப்டி கமிஷனர் ஸ்ரீ ராமேஷ்வரி நயான் நடத்தி வைத்தார். திருமணத்தின்போது மத்தியசர்க்கார் மந்திரி கனம் நிவாகர் அவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் நண்பர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். சட்டப்படி நடந்த பதிவுக் கல்யாணத்திற்கு கனம் காட்கில் சாட்சிக் கையொப்பம் இடுவதை மேலே படத்தில் காணலாம்.

அந்தப் பயிற்சிகளைச் சிரசாசனத்துடன் சேர்த்துச் செய்து வந்தால் பல குறைகள் நிவர்த்தியாகும். தசைகள், நரம்புகள், திரைகள், கண்ணுக்குள் உள்ள கண்ணாடிகள் முதலியவற்றிற்கு நல்ல புத்துணர்ச்சி ஏற்படும். கண்ணாடி போட்டவர்கள்கூட இப்பயிற்சி செய்து வந்தால் கண்ணாடியின் எண்களை அதிகமாக்குவதற்குப் பதிலாகக் குறைத்து வரலாம். லேசாகக் கண்ணாடி அணிபவர்கள் சில நாட்களில் எடுத்து விடலாம். தூரப்பார்வை, கிட்டப் பார்வை, உள்ளவர்கள் இந்தப் பயிற்சியைச் செய்தால் அவர்கள் தசைகளின் பிடிப்புவிட்டுக் கண் பார்வை சுகப்படும். ஆனால் கண்மணியில் இருக்கும் கண் வில்லையின் கண்ணாடி, பிறவியிலேயே தட்டையாகவோ, நீண்டோ இருந்து அதற்காகக் கண்ணாடி அணிபவர்கள் இப்பயிற்சி செய்தால் குணமாகும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. மற்றவர்களுக்கெல்லாம் குணமாகும். நான் சொல்லும் கண் பயிற்சியைச் சாதாரணமாய் உட்கார்ந்து கூடச் செய்யலாம். சிலர் இளம் சூரியன் முன் உட்கார்ந்து செய்வதும் உண்டு. ஆனால் சிரசாசனத்தில் செய்தால் நூற்றுக்கு நூறு பலன் கிடைக்கும்.

தொத்து நோய்களையும் இக்கண் பார்வைச் சிகிச்சையினாலும், சிரசாசனம் செய்வதினாலும் தடுக்கலாம். இயற்கையாய் ஏற்படும் "சாலேஸ்திரம்" சிறுவயதிலிருந்து சிரசாசனம் பழகுபவர்களுக்கு வராது. வயதானவர்கள் செய்தால் அதிகம் பாதிக்கப்படாமல் சிறிது முன்னேற முடியும்.

இது தவிர சாதாரணமாய் இளம் சூரியன் முன் உட்கார்ந்து இரண்டு முதல் ஐந்து நிமிஷம் வரை சூரியனை உற்றுப் பார்த்து, பிறகு உள்ளங் கைகளால் கண்களைச் சிறிது நேரம் மூடி இளைப்பாறி வந்தால் மிகவும் நல்லது. (தொடரும்)

# ஆயுட் காலத்துக்கு பென்ஷன்

நீங்கள் பென்ஷன் பெறமுடியாத உத்தியோகத்திலோ, வியாபாரத்திலோ, தொழிலிலோ இருக்கிறீர்களா? நீங்கள் கூட இந்த சுலபமான 'கை உதவி' முதலீடு திட்டத்தின் பிரகாரம் உங்கள் ஆயுட்காலத்திற்குப் பென்ஷன் பெறமுடியும்.

இப்போதே தொடங்குங்கள். அடுத்த 12 வருடங்களுக்கு மாதாமாதம் விடாமல் ஒரு பன்னிரண்டு வருஷ நேஷனல் சேவிங்ஸ் ஸர்டிபிகேட் வீதம் வாங்குங்கள். தொகை ரூ. 150 என்று வைத்துக்கொள்வோம். இந்த ஸர்டிபிகேட்டுகள் 1963 முதல் ஒவ்வொரு வருஷத்திலும், காலாவதியாகி வரும். மாதம் ஒரு ஸர்டிபிகேட் வீதம் மாத்திரம் ரூ. 75 போனஸ் பெறுங்கள். அசல் தொகை ரூ. 150ஐ திரும்ப முதலீடு செய்து விடுங்கள். இப்படியாக 1963 முதல், உங்களுக்கு மாதாமாதம் ஒழுங்காக ரூ. 75 வருமானம் கிடைக்கும்.

இதனுடன் அசல் தொகைகளின் மொத்தம் ரூபாய் 21,600 உங்கள் வாரிசுதாரர்களுக்கும் வைக்கலாம். இன்றே ஆரம்பித்து மாதம் ஒரு ஸர்டிபிகேட் வீதம் அடுத்த பன்னிரண்டு ஆண்டுகளுக்கு வாங்குங்கள்.

**நேஷனல்
சேவிங்ஸ்
ஸர்டிபிகேட்டுகள்**

**எதிர்கால நலனை உத்தேசித்துப்
பார்ப்பவர்களுக்குப் பாதுகாப்பு**

இந்திய நேஷனல் சேவிங்ஸ் கமிஷனர் வெளியீடு. ரீஜனல் காரியாலயம்,
சாஸ்திரி பவன், சென்னை

AC-[illegible]



# ஒவ்வொரு புருஷனுக்கும் அன்றாடம் தேவைப்படுபவை

நீங்கள் டாம்கோ ஓடிகொலோன் ஷேவிங் ஸ்டிக்கை உபயோகித்து முக க்ஷவரம் செய்து கொள்ளும்போது எக்காலும் அறிந்திராத குளுமையும் சுகமும் அனுபவிப்பதை உணர்வீர்கள். அது நொடிப்பொழுதில் நுரை தருகிறது—உலர்ந்துபோவதுமில்லை. கத்தி உங்கள் முகமீது மெத்தென வழுக்கிச் செல்கிறது!

☞ டாம்கோ ஓடிகொலோன் ஸோப்பைத் தேய்த்து ஸ்நானம் செய்யும்போதும் நீங்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைவீர்கள்—நயமான விலையில் அருமை மிக்க ஸோப்பு அது. அதன் ஜில்லு ஜில்லுப்பான புதுமணம், உங்கள் அன்றாட வேலைகளை மலர்ச்சியுடன் துவக்க உதவி புரியும்!

டாம்கோ
ஓடிகொலோன் ஸோப்பு
மற்றும் ஷேவிங் ஸ்டிக்




தி டாடா ஆயில் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா ?



ஆனந்தமும், ஆரோக்கியமும் கூடிய தங்கள் புன்னகையை அளிக்க மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் உங்கள் ஈறுகளைப் பாதுகாத்து, சுவாசத்தை இனியதாக்கி பற்களைப் பளபளவென்று வெண்மையாக்கும். இவையாவும் ஏககாலத்தில் செய்வதை நீங்கள் அறிவீர்கள்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை பிரத்தியேகமான ஆராய்ச்சி முறையினால் தயாரிக்கப்பட்டது. அதன் சுத்தத்திற்கு உத்தரவாதம். அதனால் தான் உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான மக்கள் தினமும் தங்கள் பற்களை சுத்தம் செய்ய இரு வேளை மக்ளீன்ஸை உபயோகித்து வருகிறார்கள்.

"கடந்த சில ஆண்டுகளாக நான் மக்ளீன்ஸ் பற்பசையை உபயோகித்து வருகிறேன். அதிலிருந்து என் பற்களைப் பார்ப்பவர்கள் ஒவ்வொருவருமே ஆச்சரியப்படுகிறார்கள்."

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக**




வியாபார விபரங்களுக்கு: ஜே. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வாட்டன் ரோட், பம்பாய் 26.

